புத்தாண்டு



வாழ்த்துக்கள்

ஆசிரியர்:
டி. சிவஞானம்

The 'SHIVAJI'-Published Every Sunday

ஞாயிறு வெளியீடு

| மாலை 10 | திருச்சி 15—4—1945 பார்த்திப-௵ சித்திரை-௴ 3-உ ஞாயிற்றுக்கிழமை | மணி 21 |
|---|---|---|

13/4



# ஆண்டு புதிதாகுது!



நீண்டபொழு தோடியது
நீ அருகில் இல்லை
ஆண்டு புதிதாகுது நீ
ஆளவர வில்லை!

பூண்ட வுறவுக் கவிஞன்
போக்குவதும் இல்லை
நீண்ட துயர் நீங்கிவிட
நின்வரவே எல்லை!

வந்துவிடு வந்துவிடு
வருஷமெனும் மனைவி
சிந்திப்பதில் இல்லை
ஜீவனோபாயம்!

எந்தமழை எந்தவெயில்
எதுநிழல் புதிர்கள்
சொந்தமனை வாழ்வுதரும்
சொல்லின்பில் உதிரும்

## புத்தாண்டில், புத்துயிரும் புத்தொளியும் பூத்திடுக.

*மத உணர்ச்சியால் மனித சமுதாயம் மனம்போனபடி யெல்லாம் வாழ்வின் ஏற்ற இறக்கங்களில் விழுந்து எழுந்து இப்போது வீதியில் நிற்கிறது. ஏச்சுக்கும் வெறிக்கும் இடையில் நசுங்கித் தத்தளிக்கும் மதவிஷயத்தை சற்று நம்முடன் சற்று நின்று பேச விரும்புகிறார் அன்பர் "கரிச்சான் குஞ்சு"*

# மத விஷயம்

"கரிச்சான் குஞ்சு"



ஸமூகம், மதம்போன்ற விஷயங்களில், அடிப்படையாராய்ச்சி செய்வதில் பெரிய கோளாறொன்று இருக்கிறது. பெரிய துவேஷத்தை வளர்க்கும் அது என்பது தவிர, ஓரளவில் அது நாசவேலையாய்க்கூட ஆய்விடும். ஆனால் அது அவசியம் என்று ஒரு அபாக்கியசாலியான வாழ்க்கை வழிப்போக்கன் நினைக்க ஆரம்பித்துவிட்டால் அவனுள்ளம் அமைதியோடு இருப்பது அசாத்தியமாய்விடுகிறது. அடிபட்டு ரத்தம் சிந்தி இறுதியில் உயிரைவிட்டாவது தன் சித்தாந்தங்களை மனிதர் காதில் ஊதிவிடுவதைத்தான் லக்ஷ்யமாகக் கொள்கிறது அந்த உள்ளம். வாஸ்தவம்தான்;

தடாகத்தின் பாசி நாற்றமோ அல்லது தாமரை மணமோ பரவும்போது, சூழ்நிலையில் ஏற்படப்போகும் வெறுப்பு விருப்புகளை யோசித்துவிட்டா பரவுகிறது? நிற்க,

விவேகத்தின் உதவியோடு சற்றே கண்டன மனப்பான்மையோடு ஸமூக, மத விஷயங்களை ஆராய்வதில், மத விரோதிகளுக்கும் மதப்பற்றுடையவர்களுக்கும் ரொம்ப வித்தியாசமுண்டு.

உதாரணமாக, பெற்ற தாய் தன் குழந்தையைக் கடிந்துகொண்டு அடிப்பதற்கும், இளையாளொருத்தி, தன் மூத்தாள் குழந்தையை (ஒரே சகட்டுக்கு) கடிந்துகொண்டு அடிப்பதற்கும் வித்யாசமுண்டல்லவா, அது மாதிரி.

இப்படியெல்லாம் நொண்டி சமாதானம் வேண்டியிருக்கிறது மனதிலுள்ளதை வெளியிட. பண்பாட்டையே அழித்துவிடுமோ என அஞ்சத்தக்க விதமாய்த் தற்காலச் சூழ்நிலையில் த்வேஷம் கிளைத்துக்கொண்டிருக்கிறது; ஏனோ, எப்படியோ? உளுத்துப்போயிருந்தாலும், 'பெத்தப் பேராய்' நிற்கும் கட்டுப்பாட்டைப்பற்றிக் கூறத்தொடங்க சற்று நிதானித்துத்தான் வரவேண்டியிருக்கிறது.

'பீத்திக்கொள்ளவில்லை' என்றாலும், பரமார்த்தம் தெரியவேண்டி, "இந்திய நாகரிகம் மிகப் பழையது" என்பதை ஞாபகப்படுத்திக்கொள்வோம். வாழ்க்கையில் வயதைக் குறைத்துக்கொள்வதில் மகிழ்ச்சி. வயதை அதிகமாக்கி யாரேனும் உரைக்கும்போது முகம் சிவந்துவிடுகிறது யாருக்கும்; ஆனால், பிரஸ்தாப விஷயத்தில் முற்றிலும் மாறுபடுகிறது மனோபாவம். பரவாயில்லை, இந்தியனைக் கிழவனாக்கிவிடுவோம், வருவது வரட்டும். தன் சோதர மனிதவினங்களுக்கு இந்தியனுடைய அனுபவங்கள், மூத்த அனுபவங்கள் எவ்வளவோ உதவியிருக்கின்றன. முன்னால் போகிறவன் தடுமாறி, விழுந்து, எழுந்துவிட்டால், பின்னால் வருகிறவனுக்கு தீபம் காட்டியதுபோல அவன் 'உஷார்' ஆய்விடுகிறான். சில முள்ளு, கல்லிலாவது விழாமல் தப்புகிறான்.

இப்பொழுது, மனிதனுக்குப் பூச்சாண்டி காட்டிக்கொண்டும், போலி வேஷம் போட்டுக்கொண்டு பகற்கொள்ளையடித்துக்கொண்டும் இருந்தபோதிலும், மதம் தன் இளமைப்பருவத்தில் மனிதனுக்கு ரொம்ப நன்மை செய்திருக்கிறது. மதம் என்ற பெயரில் உலகமெங்கும் வியாபித்து நிற்கும் ஒரு தனி உலகத்தை ஆராய்வது சாத்தியமில்லை என்பதுடன் அவசியமும் இல்லை என்ற வியாஜத்தில் என் பரப்பைக் குறைத்துக்கொண்டு 'இந்துமத'த்தைச் சற்றே பார்க்க முயல்கிறேன்.

'மஹாராஜன் கப்பல்' இந்துமதம். வந்ததெல்லாம் கொள்கிறது. 'அஹிம்ஸையா, இதோ என்னிடம், கடமையுணர்ச்சியா, எனக்கு ஏராளமாய்த் தெரியுமே; ஒழுக்க உயர்வுகளா, அடே, இதோ, அவற்றின் குவியலின்மேல்தான் நான் இருக்கிறேன்" என்று உலகத்தையே உண்டுவிட்டிருக்கிறது இந்து மதம்.

அந்த மகாமனிதர், செயல் வீரர் விவேகானந்தர் ஓங்கி அடித்திருக்கிறாரே சிகாகோவில் இன்னும் கேட்கிறதாமே அந்த ஒலி !!

"மற்றமதங்கள் லக்ஷ்யத்தையடைந்துவிட முடியுமானால், அங்கு காணலாம், எங்கள் இந்திய...அரிச்சுவடிக் குழந்தை நிச்சயமாய் அநுபவித்துச் சொல்லும் எங்கள் மதத்தின் ஆரம்பத்தை..." என்று.

ஆனால் இந்த மஹா வியாபகத்தனத்தினால்தான் நமது மதம் ஏராளமான போர்வையைப் போர்த்துக்கொண்டு தன் உருவத்தை எங்கோ வைத்துக் கொண்டிருக்கிறது. அந்தப் போர்வைகளை அகற்றப்போகிறவர்களுக்கோ வெகு சீக்கிரத்தில் 'துச்சாதன'ப் பட்டம் கிடைத்துவிடுகிறது.

வெகு எளிதில், ஆனால் மலைபோன்ற பெருமையோடு சொல்லிவிடுகிறோம். "வேத, புராண, இதிஹாஸ, தர்சனங்கள் எங்கள் மத ஆதாரங்கள்" என்று.

"ஆஹா..., எத்தனை சந்து பொந்துகள், முடுக்குகள் இந்த வேதம் முதலியவற்றில்" என்று பார்த்தாலோ பயமாயிருக்கிறது.

"அதெல்லாம் ரஹஸ்யங்கள்; நமக்கு எதற்கு? ஸம்பிரதாயமுண்டு நாமுண்டு" என்று நயமாய் ஆரம்பித்துக் கடைசியில் ஜாதிப்பிரஷ்டம், தலைகுனியவைத்தல், அது இது என்ற பெரிய குழிகளைச் சூழ்நிலை வெட்டும்போது, சாதாரண மனிதன் வழக்கமூட்டையைப் பழையபடி சுமக்க ஆரம்பிக்க, அறிவுமுறை மங்கி அடக்கமுறை தலையெடுத்து, அதனால் ரஹஸ்யமான, தனியான தன் வழியொன்று ஏற்படுத்திக்கொண்ட சாதாரண மனிதர்களாலேயே, இன்று நாம் காணும் மதப்பாசி, பொய்யொழுக்கம்

(5-ம் பக்கம் பார்க்க.)

சிலையாராய்ச்சி

ரா. சு. முருகேசன்

# சிற்றுளியால் செதுக்கிய சிறுகதை

★



யுத்தப் பிரதேச ஆஸ்பத்திரி ஒன்றில் வேலை நேர சிக்கன சுத்திகரிப்பு யந்திரங்கள்.

சண்பக ராமநல்லூர் என்றால் யாருக்குமே தெரியாது. திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள ஊர் அது என்றால் அங்குள்ளவர்களுக்குஆச்சர்யமாகத்தான் இருக்கும். 'தாமிர்வர்ணிக்கரையிலே பிறந்து அதன் தண்ணீரையே குடித்து வளர்ந்த தமிழன்' என்று பெருமை பேசும் எனது தாத்தா முத்தையபிள்ளைவாளுக்கே தெரியாது என்றால், வேறு யாருக்குத் தெரியப்போகிறது!

ஆனல், "என்ன தாத்தா, செம்பாநல்லூர் தெரியாது? நம்ம செம்பாராநல்லூர்" என்று சொல்லிவிட்டால் போதும். "எலே, அதைச் சொல்லுதியா! முதல்லேயே அப்படிச் சொல்லி அழறதுக்கு என்னலே?......நல்லாச் சொன்னே! தாமிரவர்ணித் தண்ணி குடிச்சு வளந்த எனக்காலெ செம்பாராநல்லூர் தெரியாது? அந்த ஊர்ச்சாத்தா ரொம்ப புரொவலம் இல்லே? எனப் பேச ஆரம்பித்துவிடுவார்.

அந்த ஊர்ச் சாத்தா பிரபலம் அடைந்தவரா இல்லையா என்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனல் சமீபத்தில் நான் 'செம்பாராநல்லூர்' என்ற பெயரால் வழங்கப்படும் சண்பகராமன்நல்லூருக்குப்போனது வேறு காரணத்துக்காக.

அவ்வூர்க் கோவிலில் ஒரு அற்புதம் இருப்பதாக எல்லோரும் சொல்வதுண்டு. தமிள்நாட்டுக் கோவில்கள் கலா நிலையங்கள் அல்லவா? ஒவ்வோர் கோவிலிலும் புது ரகச் சிற்பங்கள்—இல்லாவிட்டாலும் சாதாரணமான சிலைகளாவது—இருக்கின்றன. இங்குள்ள கோவில் சிற்பத்தில் உள்ள அதிசயம் என்னவென்றால்...

கோவில் மண்டபத் தூண்களிலே அதிசய ஜந்து ஒன்று துதிக்கையைப்பிடித்து, இரு காலால் நிற்பதைப் பார்த்திருப்பீர்களே? ஆமாம், யாழி என்றுதான் சொல்வார்கள். மற்றக் கோவில் யாழிகளுக்கும் இங்குள்ளவற்றுக்கும் வித்தியாசம் உண்டு. எனது பல்வரிசையைப் போல, "அழகான தந்தங்களைக் காட்டி சிறிதே பிளந்திருக்கும் யாழியின் வாய்க்குள் கையை வைத்தால், கடகட என்ற சப்தம் எழும். உருண்டையாக ஒன்று படும். ஆம். அந்த யாளியின் வாய்க்குள் உருண்டைக்கல் ஒன்று சிறு பந்து போலக் கிடக்கிறது. பளபளவெனக் கடைசல் பிடித்த அந்த யாளியின் வாய்க்குள் எப்படிப் போடப்பட்டது என்பது தான் பார்ப்பவர்களுக்கு விளங்காத புதிர்.

அந்தக் கல்லைப் பார்த்த சமயத்திலே எனக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. 'விக்கார் ஆவ் வேக் பீல்டு' என்ற நாவலில் ஒரு கட்டம். ஒரு பெரிய படம் அக்குடும்பத்தினரின் வீட்டு அறைக்குள் மாட்டப்பட்டிருந்ததாம். அதை வெளியே எப்படி எடுத்துப்போவது என்பதைவிட, அது உள்ளே எப்படி வந்தது என்பதே பெரும் புதிராக இருந்ததாம். அப்படித்தான் இருந்தது எனக்கு, அந்த யாளி வாய்க்கல்!

எனது நண்பர்களும் நானும் எவ்வளவோ முயன்றோம். அந்த உருண்டைக் கல்லை வெளியே எடுக்க முடிந்தால் தானே! இதே முயற்சியை நூற்றுக் கணக்கான வருஷங்களாக ஆயிரம் ஆயிரம் ஆயிரம்பேர் செய்துஅலுத்துப்போனதைக்கண்டுதான் அப்படி நகைக்கிறதா அந்த யாளி?

"பிசாசுப் பய மவன் இதைச் செய்தவன்" என்றான் என் நண்பன்.

சீனிவாசன் சொன்னன்—அவன் எப்பொழுதுமே குஷியான பேர்வழி—"அதெல்லாமில்லே. எங்க பாட்டியின் பாட்டன். அவன் எங்க பாட்டி ஒருசமயம் எனக்குக் கொடுத்த வடைக்குள் நூல் படர்ந்திருந்தது. அவள் வடையைத்தான் சுட்டாள். அதற்குள் நூலை எப்படித் திணித்தாள்? அதைச் சொல்லுங்கள். அதைப்போலத்தான் இதுவும்."

இப்படி வம்பளந்து வீண் கதைகள் பேசிக் காலக் கொலைசெய்வதில் எனக்கு இஷ்டமில்லை. நான் தனியாகப் போய் கோவிலைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தேன். கோபுர பொம்மைகளையும், கோவில் சுவர் கல்வெட்டுகளையும் ஆராய்வதில் எனக்கு ஒரு தனி மகிழ்வு.

கல் கல்லாகக் கண்களை ஓடவிட்டு வந்த எனக்குத் திகைப்புத் தந்தது ஒரு விஷயம். முதலில் அது புரியாத பாஷையாக இருந்தது. கவனிக்க கவனிக்க சிறிது சிறிதாக வெட்டவெளிச்சமாகிக் கொண்டுவந்தது. அதற்கும் உள்மண்டபத் தூணில் நிற்கும் யாளியின் வாய்க் கல்லுக்கும் ஏதோ சம்பந்தம் இருப்பதாகத் தோன்றியது. என்னவோ காந்திமதி......நெல்லைநாதன்...சண்பகராமன் என்ற வார்த்தைகள் இருப்பது நன்கு புரிந்தது. ஒருவாறு சிரமப்பட்டு ஆராய்ந்து பார்த்ததில் தலையும் வாலும் இடையிடையே சில பகுதிகளும் இல்லாத ரகசியம் புலனாயிற்று. எனக்கு வந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை.

ஆகவே விஷயத்தை ஒட்டவைத்து தலையும் வாலும் செய்து இணைக்கவேண்டியது எனது கடமை. இதை 'இடைச் செருகல்' என்றோ, கலைக்கொலை எனவோ யாரும் சொல்லக்கூடாது. சொன்னல் அது மகத்தான பாபமும் ஆகும். உண்மையை ஆராய்ந்து, இதுதான் உண்மை முத்திரைபெற்றது என்று சொல்லக்கூடிய பண்பாடு—சிற்ப சாஸ்திரத்தைப் பொறுத்தவரையில் எனக்குத்தான் உண்டு. அதனல் விஷயத்தை நான் சொன்னல் வேறு யாரும் மறுக்கமுடியாது...

ஃ ஃ ஃ

பாண்டிய பாரம்பரையில் தோன்றிய மன்னர்களில் சண்பகராமன் ஒருவன் என்பது சிலருக்காவது தெரிகிறதே என்பதற்காக நாம் உண்மையிலேயே மகிழ்ச்சிகொள்ளவேண்டும். பாண்டிய நாட்டின் தலைநகர் மதுரைதான் என்றாலும் சில அரசர்கள் திருநெல்வேலிச் சீமையிலும் கொற்கைப்பட்டினத்திலும் இருந்து ராஜ்யபாரத்தைக் கவனித்து வந்திருக்கிறார்கள். இது இன்னும் உயிர் வைத்திருக்கும் தமிழ்நாட்டுச் சரித்திரத்தின் கீச்சுக்குரல் என்பது அதை ஆராய்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

சண்பகராம பாண்டியன் சிலகாலம் திருநெல்வேலிச் சீமையில் இருந்து அரசு புரிந்துவந்தான். அக்காலத்திலே அவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அது வளர்ந்து, பெரிதானதும் 'காந்திமதி' என்ற பெயருக்கு 'என்ன?' என்று குரல் கொடுத்து வந்ததாம். அதனல் மன்னன் மகள் பெயர் 'காந்திமதி' என்று கல்வெட்டுக் கூறுகிறது.

நமது நாட்டு ராஜாக்களுக்கெல்லாம் ஒரு ஆசை. தங்கள் பெயரால் ஊர்கள் நிர்மாணிக்கவேணும் என்று. திருநெல்வேலி ஜில்லாவிலேயே பார்த்தால் கங்கைகொண்டான், சேரன்மாதேவி இப்படியாக இல்லையா? அத்தன்மையிலே சண்பகராமன் 'சண்பகராமநல்லூர்' அமைக்கத் திட்டமிட்டான். அவன் திட்டம் அல்லது, ஆசை நிறைந்த கனவு—வருஷத்திற்கு வருஷம் அவன் உள்ளத்திலேயே செழித்து வளர்ந்து வந்தது, வாழைக்குருத்துப்போல் வளர்ந்த குமாரி காந்திமதியைப்போல.

காந்திமதிக்குக் கடிமணப்பருவம் வந்த பொழுதுதான் அரசன் கனவும் பலித்தது.

காந்திமதி அந்தக்காலத்துக்கு ஒரு 'புதுமைப்பெண்' அவள் சொன்னல் சொன்னதுதான். பின் இராதா? பாண்டிய வம்சம் தழைக்க வந்த ஒரே ஒரு செல்வி அல்லவா, ராணி மங்கம்மாளைப் போல. அவள் தந்தையிடம் சொல்லிவிட்டாள்: "நான் மணம் புரிவதானல் அபாரமான காரியம் சாதிக்கிற ஒருவனைத்தான் மணப்பேன். இல்லாவிட்டால் கன்னிகையாகவே காலம் கழிப்பேன்" என்று.

ராஜகுமாரி நித்ய கன்னிகையாக இருப்பதாவது! நாடெங்கும் நகராக்கள் முழங்கின. எல்லோர் சிந்தையும் செயலும் 'மகத்தான காரியம்...மகத்தான காரியம்' என்றே துடித்தன. மகத்தான காரியம் எது? ராஜகுமாரியை மகிழ்விக்கவல்ல காரியம் எது? இத்தகைய பிரச்னைகளே வாலிபர்கள் மனதை உலுக்கி எடுத்தன.

காந்திமதி கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. வழக்கம்போல் பந்து விளையாடுதல், தோழிகளுடன் கும்மாளமிடல் முதலிய ராஜரீக காரியங்களைக் குறைவறச் செய்துவந்தாள். உண்மையில், மகத்தான காரியம் என்றால் என்னஎன்பது அவளுக்கே தெரியாது!

அவள் பெயரால் தடபுடலான காரியங்கள் நிகழ்ந்தன. 'சண்பகராமநல்லூர்' பிறந்தேவிட்டது. அங்கு கோவில்கூட எழுந்தது. கோவில் இல்லாத ஊரிலே குடியிருக்கமுடியுமா?

அந்தக் கோவிலை நிர்மாணிக்க வந்தவர்களின் உள்ளங்களில் தான் செய்வதுதான் மகத்தான காரியமாக இருக்கவேணும் என்ற ஆசை இருந்தது. எழப்போகும் கோவில் மடப்பள்ளி வேலைக்கு வந்த ஐயர்வாள்கூட 'பீமபாகம், நளபாகம்லாம் எந்த மூலைக்கு. ஐயர்வாள் பாகம் மகா அற்புதமானது. அந்த ராஜகுமாரிகூட மயங்கிவிடுவாள் நம்ம சமையலில்!' என்றாராம்

காந்திமதி அப்படியெல்லாம் அசட்டுப் பிசட்டென்று நடந்துகொள்ளவில்லை. அவள்பாட்டிற்கு கூத்தடித்துக்கொண்டிருந்தாள் தோழிகளுடன்.

அத்தகைய சந்தர்ப்பம் ஒன்றிலேதான் அந்தக் காரியம் நடந்தது.

அரண்மனைப் பூங்காவை அடுத்த சாலை வழியாக பித்தனைப்போல பார்வையை 'பரக்கப் பார்க்க' விட்டுவிட்டு வந்தான் ஒருவன். அவன் பார்வைக்கு அழகாக இருந்தான். [இது தோழிக்குத் தலைவி கூறியதாக கல்வெட்டுச் சொல்கிறது!] கழுத்துவரை நீண்டு படிந்திருந்த கரும் பட்டுக் குஞ்சியும், இலேசாக அரும்பிய மீசையும், காம்பீர்ய பார்வையும்...... அடடா அடடாவோதான்!

ராஜகன்னிகை மயங்கிவிட்டாள், 'கண்டதும் காதல்தானே' தோழியிடம் அந்த சுகுமாரன் யார் என அறிந்துவரும்படி சொன்னள்.

அவன் யார்?

மதுரையில் பிறந்து வளர்ந்த சிற்பி தமிழ்நாட்டைச் சுற்றிப்பார்த்து வரக் கிளம்பியிருந்தான். திருநெல்வேலிச் சீமைக்கு வந்தவன் காதிலே செண்பகராமன் குமாரியின் சேதி விழுந்தது. அப்படி பிராபல்யப்படும் அந்த ஊரையும் சம்பந்தப்பட்டவர்களையும் பார்த்துத்தான் வைப்போமே என்று அந்த ஊரை அடைந்தான். அவன் அதிர்ஷ்டம், முதலிலேயே ராஜகன்னியின் கண்ணேக்கிலும் விழுந்துவிட்டான்.

மாலை ஓயும் நேரத்தில், கோவிலை தரிசித்துவிட்டு மண்டபத்திலே அமர்ந்திருந்தான் அவன். அவன் பார்வை கோவில் தூண்களையும், கோபுர பொம்மைகளையும், சிற்பங்களையும், விழுங்கிக்கொண்டிருந்தது. அவ்விதம் அவன் ரசனையில் ஆழ்ந்துகிடக்கும்பொழுது பட்டுடையின் 'சலசல' சப்தம் கேட்டுத் திடுக்கிட்டான். ஒரு கணம் பிரமித்து நின்றேவிட்டான், தூணில் உள்ள சிலைகளில் ஒன்றென.

காரணம்?

மானினம், மயிலினம் என்றெல்லாம் கவிக் கண்களுக்குத் தோன்றும் வகையிலே ஒரு கும்பல் கோவிலை நோக்கி வந்துகொண்டிருந்தது. அவன்மட்டும் ஒரு கவிஞனாக இருந்தால், ஆஹாஹா எப்படியெல்லாம் வர்ணித்திருக்கமாட்டான்? காந்திமதிக் கோவையோ, உலாவோ, எழவோ ஒன்றுகூட நமக்கு இன்றுவரை கிடைக்கவில்லை என்றால் அது அந்தச் சிற்பியின் முட்டாள்தனத்தின் முழு விளைவுதான். 'நெஞ்சொடு

(11 பக்கம் பார்க்க)

# தெருப் பாடகர்கள்

'பூர்ணா'



அன்று விடுமுறை. பஸ்ஸுக்கு காத்திருந்துவிட்டு கால்நடையாக கடைத்தெருவை அடைந்தேன். மாலையிலே கடைத்தெருவின் காட்சிக்குக் குறைவு உண்டா?

ஜனங்கள் சாரிசாரியாக அங்கும் இங்கும் போய்வந்த வண்ணமாகவே இருக்கின்றனர். கடை வாசலில் பகட்டாக, பார்ஸி பெண்ணைப்போல் உடுத்தியுள்ள ஒரு பெண் நம்மை வரவேற்கிறாள். அவள் வேறு யாருமல்ல. விளம்பரப் பொம்மைதான்.

காரபக்ஷணத்துடன் கலந்த காபியின் வாசனை நம்மை காந்தம்போல் காப்பிக் கடைக்கிழுக்கிறது. பல கலர்களில் தொங்கும் பட்டான ரிப்பன்கள் நம் தலைவியை நினைவுறுத்துகிறது. அழகான சித்திரங்களைக்கண்ட ஆர்ட் பைண்டுடன் விளங்கும் சஞ்சிகைகள் அதன் விலையையாவது பார்த்துப்போ !, என்று அழைக்கின்றன.

இவ்வளவிற்கும் என் மனதைக்கட்டிப் பிடித்து என் உடலுடன் இழுத்துக் கொண்டு மைதானத்தை நோக்கி நடந்தேன். அங்கு ஏனோ அன்று அவ்வளவு கூட்டம்?

கூட்டத்தை அடைவதற்கு முன்னரே கின்னரர்களின் ஸன்னக்குரலில் கான மழை பெய்துகொண்டிருந்தது. கூட்டத்தை நெருங்க நெருங்க, மழை வலுத்ததுமட்டுமல்ல, இடியும்கூட இடித்தது. இடி என்று இங்கு குறிப்பிடுவது தாளத்தைத்தான்!

ஆகா! என்ன அழகான கற்பனை! அதற்கேற்ப சாரீரம். அவர்களுக்கென்றே சிருஷ்டிக்கப்பட்டிருந்த அந்த ஹார்மோனியமும், கஞ்சிராவும், தங்கள் தங்கள் திறமையை, காதுக்கு இனியதாக, கேட்பதற்கு உரியதாக பொழிந்துகொண்டிருந்தன. கானமழை பொழிகிறவர்கள் இந்திராதி தேவர்கள் அல்ல! இரு இளைஞர்கள். தெருப் பாடகர்கள்!

பகைவனின் படையெடுப்புக்குப் பயந்து பர்மாவிலிருந்து ஓடிவந்தவர்கள் அல்ல அவர்கள். பாரத நாட்டில் கங்கை பாயும் வங்கத்திலிருந்து பஞ்சத்துக்குப் பெற்றோரை பலிகொடுத்தவிட்டுவந்த பரதைகள்.

அன்று பட்டு மெத்தையில் படுத்துக் கொண்டு பணத்தைத் தங்கள் கைகளால் பரிதவிக்கும் ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார்கள். இன்று நம்மிடத்திலே வந்து, பல்லைக்காட்டி, வயிற்றைத்தட்டி வாய்பாட, கைத்தாளம்போட உங்கள் கருணைக்காசு காலணாவிற்காய் காய்ந்து கிடக்கிறார்கள். அன்று சங்கிலியணிந்த கை இன்று 'சப்ளா' பிடிக்கிறது. அன்று கவலையின்றி உண்டு கவனமாக காத்து வந்த தேகம் இன்று கேட்பாரற்று, பார்ப்பாரற்று, உள்ளம் உருகியதாகயிருக்கிறது. அன்று அதிகப்படி வேலையினால் அசந்திருந்த அவர்களின் இறைப்பைகள் இன்று வேலையற்று: சோம்பலுற்று துயில்கிறது.

அன்று அவர்கள் 'கங்கா டிரேடிங் கம்பெனி'யின் சொந்தக்காரர் ஸேட் ராம்லாலின் செல்வக் குமாரர்கள். இன்று தென்னிந்தியாவிலே தட்டேந்தி பிழைக்கும் பிச்சைக்காரர்கள். அவர்கள் தெருப்பாடகர்கள்.

அவர்கள் இருவரும் சகோதரர்கள். தமையனுக்கு வயது பதினாறிருக்கலாம். தம்பிக்கு ஒன்றிரண்டு குறைவிருக்கும்.

அவர்கள் தலைகள் எண்ணெயற்று புழுதியுற்றுக் காற்றில் பறந்துகொண்டு இருந்தன. கண்கள் ஒளிகுன்றி, விழி பிதுங்கியிருந்தன. மாமிசப்பற்றே இல்லாமலிருந்த அவர்கள் கைகள் குச்சிகள் போலிருந்தன. காசுத்தட்டைப் பிடித்திருக்கும் அவன் கரம் அதன் கனத்தால் சற்று வளைந்திருந்தது. பணத்தால் கனக்கிறதோ என்று எண்ணாதீர்கள்! அவ்வளவு பணம் கிடைத்தால் அவர்கள்பஞ்சப்பாட்டா பாடுவர்?

அந்த ஹார்மோனியத்திலிருந்து அவ்வளவு நாதத்தையும் கஞ்சிராவிலிருந்து எழுந்த இடிபோன்ற தாள சப்தத்தையும் எழுப்ப அவர்கள் கரங்களுக்கு எங்கிருந்துதான் அவ்வளவு சக்தி கிடைத்ததோ? அது நமக்குத் தெரியாது! மொத்தத்தில் அவர்கள் இருவரும் இரண்டு எலும்புக் கூடுகள்தான்!

விடுமுறைக்காக மூடியிருந்த ஓர் கடையின்மேல் அவர்கள் இருவரும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்கு முன் ஓர் கிழிந்த பாய் தரையில் விரித்தபடி கிடந்தது. பாயின்மேல் ஓர் தட்டு. அதில் காலணாக்களும், பைசாக்களும் கிடந்தன. பாயில்கூட ஓரிரண்டு நாணயங்கள் கிடந்தன.

தமையன் கை ஹார்மோனியம் வாசிக்க தம்பியின் கை கஞ்சிரா அடிக்க இருவர்கள் வாயும் அருமையான ஹிந்துஸ்தானி கீதங்களைப் பொழிந்துக் கொண்டிருந்தது. இரண்டு பாட்டுகள் பாடி முடிந்ததும் தம்பி தட்டேந்தி கூட்டதில் வருவான். காசு போட்டாலும், போடாவிட்டாலும் அவர்கள் தங்கள் கடமையாக நினைத்துப் பாடிக் கொண்டும், பிச்சைக் கேட்டுக்கொண்டுமிருந்தார்கள். ஜனங்களில் சிலர் உட்கார்ந்துக்கொண்டும், சிலர் நின்றுக் கொண்டும் கான விருந்தை உட்கொண்டிருந்தனர். சிறுவர்களும் மெய்மறந்து பாடிக்கொண்டிருந்தார்கள்.

ஒரு மூலையில் ஏதோ கசமுசல் ஏற்பட்டது. ஜனங்கள் ஒவ்வொருவராக எழுந்திருக்க ஆரம்பித்தனர். சப்தம் அதிகமாயிற்று. கூட்டத்தைப் பிளந்துக் கொண்டு இரண்டு புலிகள் முன்னேறின.

போலீஸைக் கண்டதும் சிறுவர்கள் நிறுத்தினர். போலீஸார் ஜனங்களைக் குச்சிக்கொண்டு மிரட்டி கலையச் செய்தனர். பலர் பயந்தோடினர். தைரியசாலிகளான சிலரும் போலீஸ்காரன் குச்சியுடன் தன்னை நெருங்குவதைக் கண்டு நமக்கென்ன 'ஊர்வம்பு' என்று திரும்பியிருப்பார்கள்! முடிவாக ஒரு சிலரைத்தவிர மற்றவர்கள் கலைந்து விட்டனர்.

போலீசார் கேட்கின்ற தமிழ்க் கேள்விகளுக்கு தமிழறியாத அச்சிறுவர்கள் மிரள மிரள விழித்தனர். போலீசில் ஒருவன் கண் பணத்தட்டை பார்த்தது பாயில் கிடந்த பணத்தையும் எடுத்துக் கொண்டு அச்சிறு இளைஞர்களுடன் அவ்விரு போலீஸாரும் ஸ்டேஷனை நோக்கி புறப்பட்டனர்.

அச்சிறுவர்களின் விதியை எண்ணி வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். இருட்டுகிற சமயம். என் வீட்டுக்கருகில் உள்ள சந்தில் அச்சிறுவர்கள் இருவரும் கண்களில் நீர் பெருக நின்றிருந்தனர்.

அவர்கள் ஏதோ சொன்னார்கள் ஹிந்தியில். அரைகுறை ஹிந்திப் படிப்புள்ள நான் அவர்கள் சொன்னதை அறிய முடிந்தது. 'அந்த போலீஸார்கள் அவர்களை ஏதோ ஒரு சிறு வீட்டிற்குள் அழைத்துச் சென்று தட்டில் இருந்த பணத்தை எடுத்துக்கொண்டு இங்கு கொண்டுவிட்டார்கள்'

மறுநாள் காலை அந்தத் தெருப்பாடகர்கள் தெருவில் இறங்கிப் பாடிக்கொண்டு நடந்தார்கள்.

# பெண்ணுக்கு



'சிலம்பு'

★

தங்கவளை மலர்ந்த சேங்கரக்கோடீ-கனிந்
தாடித்துவள நிலாக்கற்றை விரிக்கும்
திங்கள் ஒளிமுகத்தில் மூரலரும்ப-ஒளிச்
சோதி சேறிக்குங்கண்கள் பாதி மலரத்
துங்கவளமை மிஞ்சு மங்க வளைவில்-மீறித்
துள்ளி வளைந்தோடீயும் மின்னலசையக்
கங்கை மகளேனவேப் பொங்கிக குமுழும்-வாலைக்
கன்னிப் பெரு :வழிலே சொல்வதைக் கேளாய்.

வல்லிக் கொடியிடையை, பிஞ்சுவிரலை-உயிர்
வாஞ்சை கொளத்துடிக்குமங்க நெளிவைக்
கல்லைப் பிசைந்து கலையுள்ள விரிவால்-உளங்
கவ்வுஞ் சிலையினிலே உன்னை வடித்தோம்
சில்லுக் குரலிசையைச் சிந்து நகையை-எம்
சிந்தை திருகுமுந்தன் சுந்தரப் பேச்சைச்
சொல்லைக் குழைத்து மொழித்தேனிற் கலந்து-மணஞ்
சொக்குங் கவியினிலே உன்னையிசைத்தோம்.

கற்றை நிலா சிதறும் முத்து மணியும்-உன்
கண்ட மணைந்து மனம் விம்மி மகிழும்
சுற்றிப் பவனிவரும் தென்றலலையில்-விரி
சோலை மலரினங்கள் கூந்தல மரும்
முற்றிக் கனிந்தநறும் வெற்றிலைச் சாறு-உன்
முத்துப் பல் வரிசையினை முத்தி நெகிழும்
பற்றி வளருமிளம் பட்டுப் புழுக்கள்-உன்
பச்சையுடம்பினுக்கோர் கச்சை யருளும்.

முன்னைப் பழம் பொருளின் சொன்ன மனசில்-அலை
மோதியமர்ந்த பரஞ்சோதி வெளியில்
உன்னி யெழுந்த துந்தன் கன்னியுருவம்-உயிர்
ஊட்டமுருப் பெற்றதேங்கள் தேட்ட மனசில்!
மின்னிச் சுழலு மேழிற் கன்னி மகளே!-வெறி
மிஞ்சிச் சுழல வனை நெஞ்சமணைந்தோம்.
பின்னிப் புரளும்கலைக் கிண்ண மதுவை-உண்ட
பித்து வெறியினிலே சித்தமிழந்தோம்.

(2-ம் பக்கத் தொடர்ச்சி.)

## மத விஷயம்

ஏற்பட்டு விருத்தியாகியிருக்கிறது. சிரமமான வேலையென்றாலும் பாசி வாரினாலொழிய விடியாது நம் வாழ்க்கை.

இந்துமதத்தின் ஆதாரங்கள் என முன் சொன்ன வேதம் முதலியவற்றில், எத்துணை வருஷ மனித சிந்தனை, எத்துணை வருஷ மனித ஏமாற்றம், எத்துணை வருஷ மனித அமைதி, எத்துணை வருஷ மனித சந்ததிகள் உறைந்துகிடக்கின்றன! எத்துணை நூறு தலைமுறைகளின் சரித்திரம் புதைந்துகிடக்கிறது. யாகங்கள் எங்கு ஓங்கின? அவை மடிந்து போனதும் எங்கு? அப்படி அவற்றை மடியச்செய்த அறிவு தோன்றியதெங்கு? எங்ஙனம்? அறிவு பயந்த அழிவை, அரிய தத்துவமாக்கி, அநங்கன்போல மறுபடியும் யாகக் குடும்பம் உருவற்றுக் கிளைத்துக் கிளம்பச்செய்தவர் யார்? எங்ஙனம்? எங்கு? இதுபோல், ஆயிரம், ஏன் பல்லாயிரம் கேள்விகளுக்குச் சரியான விடைகள், சுருதி, ஸ்மிருதி, புராணங்களில் உண்டு.

சரியானபடி கேள்வி கேட்கும் புத்திசாலிகள் தோன்றி, கேள்வி கேட்டு விடை வந்தபோதெல்லாம், அந்த விடைகளை மாத்திரம் கொண்டு அந்த புத்திசாலிகள் ஒரு 'அபிப்பிராயத்தை' நிர்ணயமாய் ஏற்றபோது 'ஒரு மதம்' பிறக்கிறது. ஆமாம், அந்த எள்ளுப்பாட்டன் இந்து மதத்தின் வம்சந்தான். சந்தேகமேன்? ராமனுக்கு ராகவன் (ரகுவின் தொடர்புள்ளவன்) என்ற பெயர் ஏற்பட்டிருக்கும் கதைதான். இப்படியில்லாவிட்டால்,

ஜைனமும் பௌத்தமும், கர்மமும் ஞானமும், அத்வைதமும் த்வைதமும், சாக்தமும் வைஷ்ணவமும், வர்ணாஸ்ரமங்களும் அதிவர்ணமான ஞான வைராக்யங்களும், ஒரே இந்தியாவில், ஓங்கியும் ஒழிந்தும், அழித்தும் அழிந்தும், அப்படியும் இப்படியுமாய் ஜாலம் காட்டியது சாத்யமாகுமா?

'மதங்கள்' என்ற ஆலங் காடுகளில் 'அக்குணி' விதைகளாவன ஒவ்வோர் அபிப்பிராயங்கள்தான். சற்றே அந்த வார்த்தை 'மதம்' என்பதைப் பிரித்துப் பார்க்கவேண்டும் இங்கு. 'அபிப்பிராய'மாவது ஓர் நினைவு; நினைவு நிகழ்வது மனத்தில். ஆக 'மன(மந்)' என்ற ஒரு வினைப்பகுதி, அதுதான் வடமொழியில் 'தாது' எனப்படுவது, அதன் பொருள் நினைத்தல். அதிலிருந்து ஆக்கிய வடமொழித் தொழிற்பெயர், 'மதம் = நினைவு = அபிப்பிராயம்.

ஆக முடிவில், குறிப்பிட்ட ஒரு ஆதி மனித வம்சத்தைக் குறிக்கும் சொல்லாகிய 'இந்து' என்பதோடு சேர்த்துச் சொல்லப்படும் மதம் அன்றிலிருந்து இன்றுவரை வந்த, அந்த இன மனிதர்களின் அபிப்ராயங்கள். தனியே பிரித்து புத்தமதம் என்பது போலவும், அல்லது தத்துவத்தைக்கொண்டு 'வைஷ்ணவம்' என்பதுபோலவும் சொல்லப்படுவனவெல்லாம் முன் சொன்ன இனத்திடையே உண்டானதொரு இடை ஏற்பாடுகளாம்.

இந்த இடையேற்பாடுகளுக்கும் ஆதி விஷயங்களுக்கும் ஒத்த சில முடிவுகள் அன்றிலிருந்து இன்றுவரை ஒரேவித அனுபவத்தோடு நிலைத்து நிற்பவை ஆகின்றன.

அவை தவிர மற்றவை காலப்போக்கில் ஓங்கியும் ஒழிந்தும் போனமையாலேயே 'நிலையாதன' ஆகின்றன.

(தொடரும்.)

# தம்பதிகள்

த. ர. ராமு

நான் அப்பொழுது தான் முதன் முறையாக திருச்சிக்கு வந்தது. விட்ட குறையை முடிப்பதற்கு வேண்டிய முஸ்தீபுகளுடன் வந்து சேர்ந்தேன். ஆனால் ரயிலில் வரும் பொழுது இருந்த குதூகலம் திருச்சியை அடைந்து விட்டோம் என்பதற்கான அறிகுறிகள் தோன்றியவுடன் எங்கோ மறைந்து விட்டது. ஏனெனில் நாமோ புதிது ஊருக்கு. நம்மை யார் வரவேற்பார்கள். எங்கு தங்குவது என்ற பிரச்னைகள் தோன்றவாரம்பித்தன. ரயிலும் கோட்டை ஸ்டேஷனை அடைந்தது. நானும் ரயிலை விட்டு இறங்கினேன். எனது பிரச்னைகளுக்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்தது போல் எனக்கு முன் ஒரு தரம் பழக்கமான நண்பர் அவ்வமயம் அங்கு வந்தார் அவரை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டதினால் அவரது இருப்பிடத்தில் 4 நாட்கள் தங்கினேன்.

பின்பு வேறு பக்கம் எனது இருப்பிடத்தை மாற்றிக் கொண்டு எனது புது நண்பரின் மனதிற்கு கொஞ்சம் நிம்மதியைக் கொடுத்தேன். அங்கு சென்று ஒரு வாரம் ஆயிற்று. எனக்கு நண்பர்கள் அவ்வளவாக ஏற்படவில்லை. ஒரு நாள் இரவு எனது இருப்பிடத்தில் படுத்துக் கொண்டு சுவற்றில் சொருகியிருந்த ஊதுவத்தியின் புகை சுழன்று சுழன்று போவதைப் பார்த்துக் கொண்டு எனது மனக் குதிரையையும் வத்தியின் புகைச் சுழற்சியைப் போல செல்ல விட்டுக் கொண்டிருந்தேன். மனக்குதிரையின் சவாரியில் ஈடுபட்டு மெய்மறந்து தூங்கி விட்டேன். திடீரென புதிதாக ஏற்பட்ட சத்தத்தைக் கேட்டு எழுந்து பார்த்த போது விடிந்திருந்தது. அப்போது ஒருவர் என் அறையில் அங்கு மிங்கும் சுற்றிப்பார்த்துவிட்டு ஜன்னல் வழியாக போவது தெரிந்தது. முன்பின் பழக்கமில்லாதவராக இருந்தது.

மறுநாள் நான் வழக்கத்திற்கு மாறாக அதிகாலத்திலேயே எழுந்து விட்டேன். முன் தினம் வந்த அவரே ஜன்னலின் வழியாக வருவது தெரிந்தது. வந்தவர் என்னையும் கவனியாமல் எனது அறையை சோதனை போடுபவர் போல் அங்குமிங்கும் சுற்றிவிட்டு பழக்கமானவர் போல் வெகு லாகவமாறு சில ஜன்னல் வழியாக வெளியில் சென்று விட்டார். வந்தவர் இளைஞர்.

அதன் பின் நான் பள்ளிப்பாடங்களில் ஈடுபட்டதினால் வந்தவரைப்பற்றியும் அவரது செய்கையைப்பற்றியும் நான்கு தினங்கள் கவனிக்கவில்லை. சனிக்கிழமை விடுமுறை. பள்ளிக்குச் செல்லாமல் எனது அறையிலேயே சிறிது கண்ணயர்ந்தேன். இருவர் சிரிப்பது போன்ற குரல் எனது அறையில் கேட்டது. ஆண் குரலும் பெண் குரலும் போல் தோன்றியது. நான் எழுந்திருந்தேன். அங்கு இருந்தவர்கள் வேறு யாருமில்லை. முன்பு வந்த இளைஞரும் அவருடன் வந்திருந்த இளம் பெண் ஒருத்தியும் தான். என்னைக் கண்டவுடன் அந்தப்பெண் ஜன்னல் வழியாக ஓடி விட்டாள். ஆனால் அந்த இளைஞர் மாத்திரம் போகாமல் இருந்து கொண்டு என்னவோ சொல்லிச்சொல்லி நாலைந்து தடவை கூப்பிட்டார். எனக்கு அவர்கள் பாஷை புரியவில்லை. அப்பெண்ணும் அவரது அழைப்பிற்கிணங்கி மெதுவாக ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்து உள்ளே நுழைந்தாள். சிறிது நேரம் அறையைச் சுற்றிப்பார்த்து ஏதோ ஒரு முடிவிற்கு வந்தவர்கள் போல் சிரித்துக் கொண்டே வெளியில் சென்றுவிட்டனர்.

அவர்கள் இருவரும் தினம் தவறாது வந்து கொண்டிருந்தார்கள். ஆனால் நான் அவர்களைக் கவனிப்பது இல்லை. பள்ளிக்கு சென்றுவிடுவது வழக்கம். பள்ளியிலிருந்து சாயங்காலம் வந்து பார்த்தால் அறையிலே அவர்களின் அவ்விளந்தம்பதிகளின் விளையாட்டின் சின்னங்கள் தெரியக் கிட்க்கும். எனக்கு ஒரு ஆசை உண்டாயிற்று. அவர்கள் எவ்வாறு விளையாடுகிறார்கள் என்பதை பார்க்க வேண்டும் என்பதே.

ஒரு விடுமுறை நாளில் எனது அறையில் இருந்தேன். அவர்கள் வந்தார்கள். என்னைக்கூட கவனிக்கவில்லை. அவ்வளவுதூரம் பழகிவிட்டனர். வந்தவர்கள் விளையாடிக்கொண்டே இருந்தனர். அறையின் ஒரு மூலையிலிருந்து மற்ற மூலைக்கு பெண் ஓடி உட்காருவதும் ஆண் அவளைப் பிடிக்க ஓடுவதுமாக இருந்தனர். பெண் அடிக்கொருதரம் அறையிலே சுவற்றில் பதித்திருந்த நிலைக் கண்ணுடியில் வந்து உட்கார்ந்து தன்னைப் பார்த்துக் கொள்வதும் பிறகு தொடர்ந்து விளையாடுவதுமாக இருந்தாள். அழகு பார்த்துக்கொள்வதில் பெண்களுக்குள்ள மோகம் தான் தெரிந்த விஷயமாயிற்றே. பின்னர் ஊடலிலே இருந்தவர்கள் கூடலில் ஈடுபட்டனர். நான் ஒருவன் இருக்கிறேன் என்றுகூட கவனிக்காமல் இன்பத்தில் திளைத்திருந்தனர்.

அன்று அவர்கள் செய்த ஒவ்வொரு செய்கையும் இளமையின் முறுக்கு வாய்ந்த என் மனத்திலே புரட்சியை உண்டுபண்ணிவிட்டன. அவர்களது அன்பும், இன்பப் பேச்சுகளும் (பாஷை தெரியாவிட்டாலும் யூகித்தவை) உண்மையிலேயே, வாழ்க்கையில் தன் சொந்த காதலியிடம் காட்டவும் பேசவும் முடியாது. அன்று அவர்கள் தாங்கள் லட்சிய தம்பதிகள் என்பதை நிரூபிப்பது போல் இருந்தது.

சில தினங்களுக்குப் பின் எனது அறையிலே சில புதுமைகள் தென்படலாயின. இருவரும் வெளியில் செல்வதும் வரும்போது ஏதாவது பொருள்களுடன் வருவதுமாக இருந்தனர். முன் போல சிரித்து விளையாடுவதில்லை. பார்த்ததில் ஒரு படுக்கைத் தயாராகிக் கொண்டிருந்தது. தங்கள் காரியத்தில் கண்ணும் கருத்துமாக இருந்தனர். அதன் பின் பெண் டடுக்கையிலேயே படுத்துக் கிடந்தாள். ஆண் மாத்திரம் போவதும் வருவதுமாக இருந்தான்.

இதற்குள் நான் தங்கியிருந்த அறையின் சொந்தக்காரர் வீடு பழுது பார்ப்பதின்பொருட்டு என்னை வேறு இடத்திற்கு போகும்படி நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்.

அந்த தம்பதிகள்! ஆம், வீடு பழுது பார்க்கும்போது இந்த இரண்டு சிட்டுக் குருவிகளும்கூடத்தான் வெளியேற வேண்டியிருக்கும். எனக்கு வேறு நல்ல இடம் கிடைப்பது சற்று சிரமம் தான். ஆனால் கட்டற்ற வெளியில் திரிந்து சதா இன்பத்தில் நீந்திக்கிடக்கும் இந்த இயற்கைத் தம்பதிகளுக்கு நிச்சயம் நல்ல இடம் கிடைக்கும். அதை நினைத்துத்தான் பொறாமைப்படுகிறேன்.

# கனவும் நனவும்

(வித்வான் வி. துரைசாமி)



ஊரின் கோடியில் இருந்தது அந்தத் தெரு. சோபையற்ற வெளிச்சத்தோடு விளக்குக் கம்பங்கள் மூலைக்கொன்று நின்றன. சிலுசிலுவென்று ஊதல் காற்று தெருவோரத்தில் இருந்த தென்னை மரங்கள் காற்றின் வேகத்தினால் ஆடியசைந்தன. அந்தத் தெருவின் நடுவில் இருந்தது அந்த ஓட்டு வில்லை வீடு. தெருக்கதவு ஒருக்களிக்கப்பட்டிருந்தது. உள்ளேயிருந்து விளக்கு வெளிச்சம் வீதியை எட்டிப்பார்த்தது. ஆளரவம் அற்ற அர்த்த ராத்திரியில் ஆந்தையின் சிறலைத் தவிர வேறொரு சப்தமும் கேட்கப்படவில்லை.

கால்பாகம் திறந்திருந்த கதவின் வழியாக வரும் விளக்கு வெளிச்சத்தோடு, மரணப் படுக்கையிலிருக்கும் மனிதனின் முனகல் சப்தமும் லேசாகக் கலந்து வந்தது. வாழ்வின் இரும்புப் பிடியிலிருந்து தப்பித்துக்கொண்டு எல்லையற்ற ஆனந்த உலகினை எதிர்நோக்கும் ஆத்மநாதன்தான் அம்மனிதன். இருள்தேவதை களித்து நடமிடும் அந்நடு நிசியில் ஆத்மநாதனின் ஜீவன் இரண்டு உயிர்களை ஏங்கவிட்டு எமனை எதிர்நோக்கிக் கொண்டிருந்தது அவனது படுக்கையின் அருகில் நாலைந்து சீசாக்கள் பலவித வர்ணமுள்ள மருந்துகளுடன் நோயாளியை யம வைத்யனிடம் சேர்க்கும் முயற்சியில் முனைந்து நிற்பதுபோல் கொடூரமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தன!

எண்ணற்ற சோகம் இதயத்தில் பொங்கிக் கண்களில் வழிவது போல் நீர் சொரியும் கண்களோடு அபலையாகிய அந்த ஊமைப்பெண், [illegible]து துக்கத்தை வாய்விட்டுச் சொல்லியழ முடியாமல் ஆத்மநாதனையே பார்த்துக்கொண்டிருந்தாள்! படுக்கையின் வலதுபுறத்தில் நண்பன் சுந்தரராஜன் நோயாளியின் மேல் போர்த்தியுள்ள போர்வையைச் சிறிது விலக்கி நெஞ்சில் கையை வைத்துப் பார்த்தான். அருகில் இருந்த அகல் விளக்கின் சுடர் படக்படக்கென்று இரண்டு முறை துடித்தது. அதே சமயம் சுந்தரராஜனின் மனமும் படக் படக்கென்று அடித்துக்கொண்டது.

வேதனையின் முழு பலத்தையும் மீறிக்கொண்டு ஆத்மநாதன் தன் கண்ணைத் திறந்து அருகிலுள்ள இருவரையும் நோக்கினான்! நீர்ப் படலம் அவன் கண்களை மறைத்தது. லேசான நடுக்கத்துடன் அவனது கை சுந்தரத்தின் கையோடு குசலம் விசாரித்தது.

“உனக்கொன்றுமில்லை ஆத்மா! வீணாய் அலட்டிக்கொள்ளாதே!...”

“ஆம்...... எனக்கொன்றுமில்லைதான்!... இனி ...என்ன......இருக்கிறது......எல்லாம்... முடிந்துவிட்டது......

சுந்தரம் திடுக்கிட்டான்! அபசகுனமாகத் தன்வாய் இப்படிப் பேத்தும் என்று அவன் நினைக்கவேயில்லை.

“வெறும் தலைவலியும் ஜ்வரமும் உன்னை என்ன பண்ணிவிடும்? இன்னும் நான்கு நாள் கூட ஆகவில்லையே இந்த நோய் வந்து!

“சுந்தரம்!...... உனக்குத் தெரியாது!......என் காலம் ... முடியும் சமயம்...இது! எனக்கு...... நன்றாத் தெரிகிறது.”

“இம்மாதிரியெல்லாம் உளறாதே ஆத்மா! இது உன் மனதின் கிலியைத் தவிர வேறில்லை. நீ இன்னும் இரண்டு நாளைக்கெல்லாம் வியாதியை உதறிவிட்டு எழுவாய்!” இதற்குமேல் பதில் சொல்ல ஆத்மனால் முடியவில்லை. ஆருயிர்ச் சிநேகிதன் மனமுடைந்து கூறும் சோக வார்த்தைகள் சுந்தரராஜனைக் கலங்கச் செய்தன. அகல் விளக்கின் சுடர் சிறிது சிறிதாக மங்கிக் கொண்டே வந்தது. அச்சமயம் மூவரது கண்களிலிருந்தும் கண்ணீர் முத்தைப்போல் உதிர்ந்தன.

வாய்விட்டுப் புலம்ப முடியாத நிலையில் உள்ள சோகம் மனதில் உடைப்பெடுத்துக் கொந்தளித்ததை விமலாவின் முகம் தெளிவாய்க் காட்டிற்று. ஆத்மனுக்குப் பிறகு தான் ஒரு தெருப் பிச்சைக்காரி என்று நினைக்கும்போது அவளது நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. ஆத்மனின் உணர்ச்சி குறையவாரம்பித்தது. துன்பம் நிறைந்த வாழ்வின் யாத்திரைக்கு இன்று முடிவுநாள் என்று அவன் உணர்ந்தான். அந்நிலையில் தான் நிறைவேற்ற வேண்டிய கடமை ஒன்றை மட்டும் அவன் மறக்கவில்லை.

“சுந்தரம்... என் குலத்தின்... ஒரே விளக்கு!... எங்கள் வம்ச விருக்ஷத்தில் தப்பி நிற்கும் ஒரு தீங்கனி!...... முள்நிறைந்த பயனற்ற...செடியில்...ஒரு மொட்டு! ...அதோ... விமலா!... என்... சோதரி. அவளை... உன் கையில் ஒப்படைக்கிறேன்!..... எனது அடைக்கலம்.....” இத்துடன் வார்த்தைகள் தொண்டையிலேயே நின்றுவிட்டன. கண்ணிரண்டும் வெறித்து ஒரே யிடத்தில் லயித்தன. மங்கியிருந்த சுடர் மறுபடியும் படக் படக்கென்று அடித்துக் கொண்டது. ஆனால் இம்முறை அது அணைந்தே போய்விட்டது. அதே சமயம் விளக்கிலிருந்து எழுந்த புகையுடன் ஆத்மநாதன் ஆவியும் கலந்து சென்றது.

அந்தச் சம்பவம் நடந்த ஒரு மாதத்துக்கெல்லாம் சுந்தரராஜ

(13-ம் பக்கம் பார்க்க.)

# என்னுடன் பேட்டி

"சித்ரகுப்தன்"

தர்மராஜா அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். நிம்மதியாக, எனக்கும் பல விடங்களிலிருந்து வந்த கடிதங்களை பார்வையிட ஆரம்பித்தேன். எல்லாம் பூலோகத் தபால் தான் — அனேகமாக எல்லாம் பத்திரிகை நிருபர்கள் என்னை பேட்டி காண விரும்பிய கடிதங்கள்.

தாகசாந்தி செய்து கொள்ளக்கூடப் பொழுதில்லாத இடைவிடாத வேலையினிடையே, இந்த முன்னூற்றுச்சொச்சம் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு நான் எப்பொழுது எங்கே பேட்டியளிப்பது? எஜமானர் இது போல எப்பொழுதாவது தூங்கமாட்டாரா? அப்பொழுது அவர்களுக்கு பேட்டியளிக்கலாம் என்ற உத்தேசத்துடன் பின்வருமாறு அவர்களுக்கு பதில் எழுதினேன்.

ஐயா!

என்னை பேட்டி காண வேண்டுமானால் எமதர்மராஜா தூங்க வேண்டும். அவர் தூங்கும் நேரம் பார்த்து நீங்கள் வருவதென்பதும் அசாத்யம், நீங்கள் ஒரு மாதம் எமலோகத்தில் தங்கியிருந்தால் சந்தர்ப்பம் கிடைக்கும். பயன்படுத்திக் கொள்ளலாம்.

தங்கள்,
சித்ரகுப்தன்.

என்னுடைய முழுவிலாசம்:—
ஸ்ரீ. சித்திரகுப்தன்,
மரணச்சீட்டு அதிகாரி
மிருத்யு பவனம்,
தர்மராஜபட்டினம்,
நரகலோக வழி,
எமலோகம்.

தர்மராஜன் விழித்துக் கொள்வதற்குள் இவைகளுக்கு பதில் வந்துவிட்டது.

'உங்கள் விலாசம் எங்களுக்கு முன்பே தெரியும். ஆனால் எப்படி வருவது? வந்தால் திரும்பி இங்கே வர சௌகர்யங்கள் உண்டா?'

நானும் சிறிது நேரம் யோசித்தேன். அவர்களை எப்படியாவது இங்கு வரவழைத்துவிடலாம். ஆனால் அவர்களை திரும்பி எமலோகத்திலிருந்து அனுப்புவது கஷ்டந்தான். எனக்கோ பூலோக பத்திரிகை நிருபர்களை பேட்டி காண வேண்டுமென்று ஆவல் துடித்தது. எமது எமதர்மராஜாவைப் பார்த்தேன். அவருடைய நித்திரை கலைய இன்னும் ஒன்றரை மாதம் ஆகும் போலிருந்தது. சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. நாமே பூவுலகிற்குப்போய் அவர்களை பேட்டிகண்டு விட்டால் என்ன? உடனே எல்லோருக்கும் கடிதம் எழுதினேன். 13ந் தேதியன்று சென்னை பக்கிங்ஹாம் கால்வாயின் கரையிலுள்ள பழைய கட்டிட மொன்றில் என்னை வந்து பேட்டிகாணும்படி.

13ந் தேதியன்று காலை எழு மணிக்கெல்லாம் நான் தங்கியிருந்த அந்த பழைய கட்டிடத்தின் முன்பு பத்திரிகை நிருபர்களின் படையெடுப்பு. அந்தக கட்டிடத்திற்கு என்ன யோகமோ? ஒவ்வொருவரும் கையிலொரு காமிராவை வைத்துக் கொண்டு பல கோணங்களில் நின்று அதைப் படமெடுத்தனர். நான் அங்கிருந்த வேலைக்காரரிடம் ஒவ்வொருவராக உள்ளே விடும்படிச் சொன்னேன்.

முதலில் வந்தவர் வரும்போதே 'நமஸ்காரம்' நான் தான் 'ஹிதோபதேசி' பிரதிநிதி என்று ஹிதமாக மொழிந்தபடியே ஆசனத்திலமர்ந்தார். சில நிமிஷங்கள் கையைக் காலை அபிநயம் பிடித்தபின் என்னைக்கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

ஹி. நிருபர் :— பகவத்கீதையில் பரமாத்மா பார்த்திபனுக்கு என்ன பகன்ரூர் தெரியுமா?

நான்:— தெரியும்! ஆனால் அதை விரிவாகச் சொல்ல இப்போ சந்தர்ப்பமில்லையே......?

ஹி. நிருபர்:— சுக்ர நீதி, விதுரநீதி, இவைகளெல்லாம் வாசித்திருக்கிறீர்களா?

நான்:— வாசித்திருக்கிறேன்.

ஹி நிருபர்:— ரொம்ப சரி! சமீபத்தில் எங்கள் ஆசிரியர் 'மெய் கண்ட மொழியார்' எழுதிய 'ஹிதோபதேச தர்ம சங்கிரகம் என்னும் புஸ்தகத்தை வாசித்தீர்களா?

நான் வாசித்ததில்லை. இந்த மாதிரி நல்ல புஸ்தகங்களெல்லாம் எமலோகத்திலே எங்கே கிடைக்கிறது?

ஹி நிருபர் :—அதனாலே பாதகமில்லை நானே உங்களுக்காக ஒரு புஸ்தகம் கொண்டுவந்திருக்கிறேன். (ஒரு புஸ்தகத்தை எடுத்து என்னிடம் கொடுத்துவிட்டு) ஹிதமாகப் பேசுவது தான் சுதந்திரமடைவதற்கும் ஸமூகம் சீர்திருத்தமடைவதற்கும் உலக க்ஷேமத்திற்கும்—பொதுவாக எல்லா விஷயங்களுக்கும் நன்மை என்பது உங்களுக்கு தெரியுமா?

நான் :—இப்பொழுது நீங்கள் சொன்னதிலிருந்து தெரிந்து கொண்டேன்.

ஹி நிருபர்:— சந்தோஷம் — நான் போய் வருகிறேன். இந்த ஆசாமி வெளியே போனதும் சாத்தியிருந்த கதவை படார் என்று திறந்து கொண்டு ஆவேசத்துடன் ஒரு ஆசாமி பிரவேசித்தார். 'நான் தான் 'இடி ஒலி' பத்திரிகையின் பிரதம நிருபர் என்று சொல்லி ஆசனத்திலமர்ந்தார்.

இடி நிருபர்:—அதட்டிப் பேசினா எதிராளி பயப்படுவானா நயமா பேசினா பயப்படுவானா?

நான் :—எப்படிப் பேசினா என்ன? முதலில் எதிராளியார்' என்று தெரிந்து கொண்டு பேசவேண்டும்.

இடி நிருபர்:— சரி! அடிமை நாட்டிற்கு நயமாகப் பேசினால் சுதந்திரம் கிடைக்குமா ?

நான்:— உங்கள் அபிப்பிராயம் என்ன?

இடி நிருபர்:—அதட்டித் தான் பேச வேண்டும். 'இடி ஒலி' மாதிரி — ஒரு வார்த்தை சொன்னாலும் அதிர்வேட்டுப் போட்டது மாதிரி இருக்கணும். அப்பொழுதுதான் எதிராளி பயப்படுவான்.

நான் :— உங்கள் அபிப்பிராயத்தை மறுக்க எனக்குத் துளிக்கூட தைரியங் கிடையாது.

இடி ஒலி நிருபர் திருப்தியடைந்து உத்திரவு பெற்றுக்கொண்டார். அவர் வெளியே சென்றவுடன் அவர் அமர்ந்திருந்த நாற்காலியைப் பார்த்தேன். ஒரு பக்கத்துக்கைப்பிடி துண்டாகக் கீழே

(14ம் பக்கம் பார்க்க)

# பர்மா ராணி



பர்மா ராணியில் ராணியாக நடிக்கும் K. L. V. வஸந்தா

இந்திய விமான வீரன் காப்டன் குமார் ஜப்பானியர் ஆக்கிரமித்த பர்மாவில் விமானத்தாக்குதல் நடத்தும்போது விமானம் பழுதடைய, தன் சகாக்களுடன் பாராசூட்டின் மூலம் இறங்கி மாறு உடையில் ஜப்பானிய சிப்பாய்களை ஏமாற்றி ரங்கூன் பையாகோவிலை அடைகிருன். தனது நண்பரான பெரிய பொங்கியிடம், குண்டுராவையும், சோனியையும் ரகசியமாக ஒளித்து வைத்துவிட்டுத் தன்னைப் பின் தொடர்ந்த வேவுகாரனை ஏமாற்றி ஒருவீட்டு மாடிஜன்னல் வழியாக உள்ளே குதிக்கிருன். அந்த வீட்டுக்குடையவரான பர்மா மந்திரி ஊசோவின் மகள் ராணி, குமாரிடம் அநுதாபம் கொண்டு தகப்பனுக்குக் கூடத் தெரியாமல் மறைத்துவைக்கிருள் ராணி ஒரு இந்தியப் பெண்ணென்றும், ஜப்பானிய பொம்மை அரசாங்கத்தின் மந்திரி ஊசோவினுல் வளர்க்கப்படுகிறவள் என்றும் தெரிந்துகொள்கிருன் குமார். ராணிக்கு, குமாரிடமிருந்த அநுதாபம் காதலாக மாறுகிறது.

ஜப்பானிய சக்கரவர்த்தி பிறந்ததின விழாவிற்காக ஜப்பானிய ஜெனரல் பஜ்ஜிஞமாவின் தூண்டுதலால் ராணியின் நடனம் நடக்கிறது. ராணியின் மீது மோஹம்கொண்ட பஜஜிஞமா ராணி வீட்டிலிருக்கும்போது வந்து கற்பழிக்க எத்தனிக்க ஊசோ வந்து கண்டிக்கிருன். ஆகவே ஜெனரல் கோபமடைந்து போகிருன். பிறகு பஜ்ஜிஞமா, ஏழரை லக்ஷம் டன் அரிசியை டோக்கியோவுக்கு அனுப்பும் உத்தரவில் ஊசோ கையெழுத்திட மறுத்த குற்றத்திற்காக சிறையிலடைத்துவிட்டு, ஜப்பானிய சக்கரவர்த்தியின் அழைப்பின்காரணமாக, ஊசோ டோக்கியோவுக்குப் பிரயாணமானுர் என்ற பொய் செய்தியை ஒலிபரப்பச்செய்து தனது வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்கிருன்.

எவ்வளவு ஹிம்சைசெய்தும் ஒற்றர்களின் இருப்பிடத்தை சொல்லாத ரஞ்சிட் சிங் என்ற இந்திய ஒற்றனை மறு நாள் காலையில் சுட்டுவிடும்படியும், உடனே இந்த செய்தியை ஒலிபரப்பும்படியும் உத்தரவிடுகிருன் ஜெனரல் பஜ்ஜிஞமா. இந்த ஒலிபரப்பைக் கேட்ட குமார், ரஞ்சிட் மூலம் ஒற்றர்தலைவன் விலாசம் தெரிந்துக்கொள்ளலாமென்று ராணியை பொங்கியிடம் அனுப்புகிருன். பொங்கிகள் எங்குவேண்டுமானுலும் செல்லலாம் என்ற முறையில் பொங்கி ஜெயிலில் ரஞ்சிட்டை சந்தித்து விலாசம் கேட்க, ரஞ்சிட் கூற மறுத்துவிடுகிருன். அந்த சமயம் ஆலய மணி ஓசை கேட்கிறது. இதை இறைவனின் கட்டளையாக எண்ணி ரஞ்சிட் உண்மையைச் சொல்லி விடுகிருன். பர்மாவில் பாட்டுவாத்தியாயராக இருந்துகொண்டு ராணுவ ரகசியங்களையும் செய்திகளையும் புருக்கள் மூலமாகவும் ஆட்கள் மூலமாகவும் அனுப்பி தாய்நாட்டிற்குத் தொண்டு செய்துவரும் மிஸ். மங்களத்தின் இருப்பிடத்தை தெரிந்துகொண்டு குமார் சந்திக்கப்போகிருன்.

மோட்டார் படகு ஒன்று காணுமற்போனதற்காக ஜெனரல் பஜ்ஜிஞமா மிஸ். மங்களத்தின்மீது சந்தேகப்பட்டு அவளை கைதுசெய்து வரும்படி கொடுச்சியை அனுப்புகிருன். மிஸ். மங்களம் குமாரிடம், தான் மோட்டார் படகு ஏற்பாடு செய்திருப்பதையும், தப்பிப்போகும் வழியையும் சொல்லி ஜப்பானிய ராணுவ அமைப்புகள் (Plans) அடங்கிய கட்டு ஒன்றையும் கொடுத்து அனுப்புகிருள். அவ்வமயம் கொடுச்சி வந்துவிடவே, மிகுதியுள்ள ரகசிய கடிதங்களை கொளுத்திவிட்டு ஓட எத்தனிக்கும்போது கொடுச்சி சுட்டுவிடுகிருன். மங்களம் உயிர் துறக்கிருள். குமார் ரகசிய வழியாகத் தப்பி, பொங்கி மடத்திற்கு வந்து பொங்கியுடன் விஷயத்தை சொல்லிக் கொண்டிருக்கும்போது. அடையாளச் சீட்டு இல்லாததற்காக கைது செய்யப்பட்டு, பஜ்ஜிஞமாவிடம் கொண்டுவரப்படுகிருன். பஜ்ஜிஞமா இந்திய விமானி தான் என்று தெரிந்துகொண்டாலும், மற்றவர்களையும் சேர்த்துப்பிடிப்பதற்கு குமாரை விட்டுவிட்டு பின்தொடரும்படி உத்தரவிடுகிருன். குமார் ராணியிடம் வந்து நடந்த விபரங்களையெல்லாம் சொல்லி, இரவே தப்பிப்போக ஏற்பாடு நடந்திருப்பதாகவும், சண்டை முடிந்ததும், ராணியை வந்து அழைத்துக் கொண்டு போவதாகவும் சொல்லிவிடை பெறுகிருன். காதலர்கள் பிரிய மனமில்லாமல் பிரிகிருர்கள்.



காதலர்கள் பிரியும் கட்டம்
வஸந்தாவும், ஹோன்னப்பாவும்

ஹோட்டல்காரியாக நடிக்கும் T. A. மதுரம்.

குமார் போகிருன். இரகசிய போலீஸ் பின்தொடர்வதைக்கண்ட ராணி குமாரிடம் ஓடி தெரிவிக்க, பொங்கி மடத்திலிருக்கும் தன் சகாக்களுக்கு சேதியைச் சொல்லும்படி ராணியை அனுப்பிவிட்டு, தான் வேறுபக்கமாக போகிருன். 12-மணிக்குள் குமார் வந்துவிடுவான் என்றும், வாராவிட்டால் சோனி குண்டு இருவரையும் படகுத் துறைக்கு போகும்படியும் சொல்ல எல்லோரும் காத்துக் கொண்டு இருக்கிருர்கள். 12-30 மணியாகியும் குமார் வாராததினுல் ராணி தன் வீட்டிற்குபோய் பார்க்க அங்கே குமார் கடிதம் கிடக்கிறது. அதைப் படித்துக் கொண்டிருக்கும்போது. பஜ்ஜிஞமா வந்து கடிதத்தைப் பார்த்துவிட்டு விமானிகள் இருப்பிடத்தைச் சொல்லும்படி

(10-ம் பக்கம் பார்க்க)







# சிவாஜி

அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கேன்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. பார்த்திப-வூல சித்திரை-மீ 3-உ. 15—4—45


## சிவாஜியின் அடிச்சுவடு

க்ஷணம், நாழி, நாள், மாதம், ஆண்டு என்ற சங்கிலித்தொடரில் ஏறி இடையின்றிச் செல்லும் காலத்தின் நீண்ட பாதையில், மனித குலத்தின் எழுச்சி வீழ்ச்சி, மாறுதல்களும் பதிந்து கிடக்கின்றன. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் வந்துபோயின. வந்துபோக போக வேண்டிய ஆண்டுகள் எத்தனையோ!

மனித ஜாதியின் கற்பனைக்கும் காட்சிக்கும் எட்டிய அளவில் எத்தனையோ அத்தியாயங்கள்கொண்ட நெடுங்காலச் செய்திகளைச் சரித்திரம் என்ற குறிப்பேட்டில் பதிவு செய்திருக்கின்ருேம்.

எத்தனை சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்தன. உலகம் உய்ய வழிகாட்ட வந்துசென்ற தீர்க்கதரிசிகளும், மஹான்களும் எத்தனை பேர், எத்தனை போர்கள், வெற்றி வீழ்ச்சிகள்!

இத்தனைக்குப் பிறகும் மனித ஜாதி பூர்ணத்வமடையாமல் சிக்கல் தீராமல்தான் தவித்துக்கொண்டிருக்கிறது. ஆனல் ஒன்று மட்டும் நமக்கு நன்ருய்த் தெரிகிறது. உலகில் மிருகபலமும், ஆத்மபலமும் பொருத ஆரம்பித்தது இன்னும் ஓயவில்லையென்று.

வசிஷ்டருடைய யோக தண்டத்திலிருந்து, மகாத்மாவின் அஹிம்சைக் கொள்கைவரை ஒரு கட்சி பாடுபட்டு வந்திருக்கிறது. கௌசிகர் முதல் இன்றைய ஏகாதிபத்திய ஆட்சிவரை எதிர்க்கட்சியின் பரம்பரையாக இருந்துவந்திருக்கிறது.

அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்தியா இந்த நிலையில் தன் விடுதலைக்கு எந்தக்கட்சியின் பக்கம் தான் திரும்புவதென்ற விஷயத்தை சிரத்தையுடன் ஆராய்ந்து பார்க்கத்தான் வேண்டும்.

மிருகபலமா? ராணுவபலமா? இரண்டில் நமக்கு எது தேவை? சிக்கல் பிரித்துச் சரியான முடிவுகாண விரும்பும்போது பண்டைய சரித்திரஏடுகளை, அவைசெல்லரித்ததாயிருந்தாலும் சிரத்தையுடன் புரட்டிப்பார்க்க வேண்டியிருக்கிறது.

மிருகபலம் மட்டும் போதுமென்று நினைத்து யந்திர ராணுவ சாதனங்களால் தங்கள் வாழ்வைச் செம்மைப்படுத்திக்கொள்ள விரும்பும் மேற்கத்திய நாகரீகத்தின் நிலையை நாம் நன்கறிவோம்.

யந்திரம், உற்பத்திப் பெருக்கம், வேலையில்லாத் திண்டாட்டம், உணவு தேடி விற்பனைக்கு அயல் பிரதேசங்களை அடிமைபடுத்த போர்தொடுத்தல், யுத்த சேவையினல் ஜனத்தொகையும், உற்பத்தி பொருள்களும், குறைந்துபோதல், பின் சமாதான உடன்படிக்கை, மீண்டும் புனர் நிர்மாணத்திட்டங்கள், அதற்காகமீண்டும் யந்திரங்களினல் அமிதமாக பொருள் உற்பத்தி செய்தல், மீண்டும் அதற்கு மார்க்கெட் தேடல், போர் தொடுத்தல் இப்படி கால் நூற்ருண்டுக்கொருதடவை மீண்டும் மீண்டும் போர்க்களத்தில் அழிந்து போவதைத்தவிர உருப்படியான ஒரு பலனும் தெரியவில்லை.

போதுமென்ற மனத்துடன் ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டு புலனடக்கமும், உயிர்த்தியாகமும் செய்து படையெடுப்பின்போதும் ஈஸ்வர தியானத்தில் அமர்ந்து, கோட்டைக்கு வெளியே துளசியைப் போட்டு தடை கட்டிவிட்டதாக நினைத்து, சொத்திழந்து, சுதந்திரமிழந்து அடிமைப்பட்டுக்கிடக்கும் கீழ்நாட்டு நாகரீகமும் இக வாழ்வை இன்பமுடையதாகச் செய்ய வலிவற்றிருப்பது கண் கூடு.

அடிமையிலிருந்து மீளத்துடிக்கும் நாட்டிற்கு உடனே தேவையானது மிருகபலமா, ராணுவபலமா என்ற புதிரை அவிழ்த்தவர் யாரேனும் உண்டா?

நாமறிந்தவரையில் இந்தப் புதிரைக் கவிழ்த்த ஒருவன் உண்டு. அவரே 'சிவாஜி மன்னன், இந்த இரண்டு பலங்களுமே நமக்கு வேண்டும். ஒன்றைவிட்டு ஒன்று தனித்துப்போனதினல்தான் இரண்டும் வலிவற்று நிற்கின்றன.

வெறும் மிருகபலம் பிரயோஜனமில்லை. வெறும் ஆத்மபலம் மட்டும் மறு உலகவாழ்வுக்கே இன்றியமையாதது. இவ்விரு விதமான பலங்களும் படைத்திருந்தார் 'சிவாஜி'. தேவி பவானியை துதித்து உள்ளொளிபெற்று அவரடைந்த ஆத்மபலமும், கட்டுப்பாடான, ஆயுத ராணுவ பலமும் அவரிடம் இருந்ததினலேயே. மஹத்தான ஒரு சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க முடிந்தது. இந்த நிலையில் இந்தியா எழுச்சியுறும் காலத்திலேயே நிலையான சுயஆட்சி சித்திக்கும்.

இந்தியா காந்திஜியின் அஹிம்சா தத்துவத்தின் ஆத்மீக பலத்துடன், உடலுறுதியுடன் திண்டோள் வீக்கித் தன்னைத்தானே காத்துக்கொள்ளும் மறவலியும் பெறவேண்டும். சிவாஜியின் அடிச்சுவட்டில் இந்தியா தன் நிம்மதியான வாழ்வை நிர்ணயிக்கும் காலம் அருகில்வரட்டுமென்று இப்புத்தாண்டில்நாம் பிரார்த்திக்கிருேம்.

### போர் செய்திகள்

ஹானேவர் நகரை அமெரிக்க 9வது ஸைன்யத் துருப்புக்கள் பிடித்துள்ளன. பிரன்ஸ்வீக் நகரில் வெள்ளைக்கொடி பறந்து கொண்டிருப்பதாக அறிவிக்கின்றனர்.

மார்சல் மாண்ட்காமரியும் பெரிய தாக்குதலை தொடங்கி இருக்கிருர். ஆயிரக்கணக்கான டாங்குகளுடன் 12 டிவிஷன் துருப்புக்கள் திமுதிமுவென முன்னேறுகின்றன.

பிரெமென் தலைவாயிலுள்ள பிரிட்டிஷ துருப்புக்களின் அடுத்த இலக்கு ஹாம்பர்க் என்ற பால்டிக் துறைமுக நகரம்.

ஹாம்பர்ச்-ஹனேவர் ரோடை நேசத் துருப்புகள் வெட்டிவிட்டன. ஜெர்மனி ஹாலந்து எல்லையருகிலுள்ள எம்டென் என்ற பால்டிக் துறைமுக நகரை ஜெர்மனியர் கைவிடக்கூடும்.

ஆகியானுவில் தென் பகுதியில் மூர்க்கமான போர் நடந்தது.

அமெரிக்க அணிகளின் தென், வட பகுதிகளில் 'ஜாப்' எதிர்த்தாக்குதல் முறியடிக்கப்பட்டன. வடக்கில் யு. எஸ் மாலுமிகள் 240 கஜம் முன்னேறி ஜாப் சப்மரீன் தளங்கள் முதலியவற்றைப் பிடித்தனர்.



—(9-ம் பக்கத் தொடர்ச்சி.)—

யும் இல்லாவிட்டால் மரண தண்டனை கிடைக்கும் என்றும் மிரட்ட, ராணி இவர்களை ஏமாற்ற எண்ணி, இன்று பண்டிகை நாளாகையால் புத்தர் கோவிலுக்கு சென்றுவந்த பிறகு சொல்லுகிறேன் என்று சொல்லுகிருன்.

எல்லோரும் கோவிலுக்குப் போகின்றனர். ராணிமட்டும் உள்ளேபோய் குறித்தகாலம் தவறி விட்டதால் தன் சகாக்கள் படகில் போயிருப்பார்களாதலால் தான்போக வழியில்லையே என்று மனமடிந்து உட்கார்ந்திருந்த குமாரிடம் அவர்கள் இன்னும் காத்துக்கொண்டிருக்கும் விஷயத்தைச் சொல்ல, குமார் ராணியையும் அழைத்துக்கொண்டு தன் சகாக்களுடன் சுரங்க வழியாக ஓடுகிருன். ராணியைக் காணுது உள்ளே வந்த பஜ்ஜினுமா சுரங்கவாயிலைக்கண்டு அதற்குள் போக யத்தனிக்க, பொங்கி தடுக்கிருர். பஜ்ஜினுமா பொங்கியை சுட்டுவிட்டுப் பின் தொடர்ந்து படகுத் துறைக்கு வருவதற்குள் மோட்டார் படகு பாரத வீரர்களை சுமந்து சமுத்திரத்தில் சென்றுவிடுகிறது. அன்று தனியாக சேவை செய்யச்சென்ற குமார் அதற்குப் பிரதிபலனுக. த்யாகமே உருவான வாழ்க்கைத் துணைவி ராணியுடன் இந்தியா வந்து இன்பம் அடைகிருன்.

திருச்சி, கோவை, நீலகிரி ஜில்லாக்களுக்கு பூர்ண விநியோக உரிமையாளர்கள், சுந்தர்பிலிம்ஸ், காசிநாத் அண் கோ கோயம்புத்தூர்

(3ம் பக்கத் தொடர்ச்சி)

கிளத்தல்' 'நோகப் புலம்பல்' என்ற தன்மையிலே ஒன்றும் செய்யாமல் 'பேந்தப் பேந்த விழித்து நின்றான் ஒரு மண்ணாந்தைபோலே. அவள் யார் என்று அறியவேணும் என்ற துடிப்புதான் அவனுக்கு.

அவள் யார்?

சாக்ஷாத் சண்பகராம பாண்டியன் புதல்வி காந்திமதியேதான். அந்திவேளைகளில் ஆலய வழிபாட்டிற்காக தோழியர் புடைசூழ வருவது அவள் தினசரி வழக்கம். அன்றும் அப்படித்தான் வந்தாள். அவள் கண்களும் அவனைக் காணாமல் இல்லை. கண்டதுமே நெஞ்சம் கவர் கள்வன் அவனை இனம் கண்டு கொண்டு மின்னல் புன்னகை சிந்தி உள்ளே போனாள். இவ்விதம் பிறந்த காதல் வளராமல் சும்மாவா நிற்கும்!

எனினும் காந்திமதியின் மனதில் அமைதி இல்லை. காரணம் தெரியாதா? அவள் பிரதிக்ஞை காதல் மணத்திற்குத் தடையாக நின்றது. நெல்லைநாதன்—அதுதான் அவன் பெயர்—தன்னைக் கல்யாணம்புரியவேண்டுமானால், அதற்கு முன்னதாக ஏதாவது மகத்தான காரியம் செய்யவேண்டுமே! அவன் என்ன செய்யப்போகிறான்! இதை அவனிடமே கேட்டுவிட்டாள்.

"ஆமாம், இதை நீங்கள் யோசித்தீர்களா?"

"எதை!..." என்று இழுத்தான் நெல்லை நாதன்.

"எதையா! நாமிருவரும் கல்யாணம் செய்துகொள்ளவேணுமென்றால் நீங்கள் ஏதாவது மகத்தான காரியம்..."

"ஆமா, நீ எதிர்பார்க்கும் பிரமாத விஷயம்தான் என்ன?" என்று கேட்டு வைத்தான் அவன்.

அவள் நாணத்துடன் குனிந்தவாறே "அது எனக்குத்தெரியாது. என்னவோ அப்படித் தீர்மானம் செய்துவிட்டேன்" என்றாள்.

அவன் சிற்பி. அவனால் ஏதாவது செய்ய முடிந்தது என்றால் சிற்பத்திலே தான் கைவரிசையைக் காட்டவேண்டும். சிற்பத்தில் என்ன புதுமை செய்வது? யோசித்தான்...யோசித்துக் கொண்டே இருந்தான். அப்படியே தூங்கிவிட்டான்.

தூங்கும்பொழுது ஒரு அற்புதமான கனவு கண்டான். விழித்தெழுந்ததும் கூத்துக் கூத்தாடச்செய்த கனவு! கடவுள்தான் அவனுக்கு அருள்புரிந்திருக்க வேண்டும் என்பது அவன் எண்ணம். பிறகு காந்திமதிகூட அப்படித்தான் சொல்லிவந்தாள்.

கனவிலே, காந்திமதி வாயில் கழற்சிக் கல்லைப் போட்டுக் கலகல என நாக்கால் உருட்டியவண்ணம் நகைத்தாள். 'இதைப்போல்உன்னால் செய்யமுடியுமா? எங்கே பார்ப்போம்!' என்றாள்.

* * *

மறுநாள் 'டங்...டங்...டங்' என்ற நாதம் தொடர்ச்சியாக எழ ஆரம்பித்தது. நெல்லைநாதன் இதய உணர்ச்சிகளைக் கல்லில் கவிதையாக்கிக்கொண்டிருந்தான். காந்திமதி அவன் செயலை ஆவலுடன் கவனித்துவந்தாள்.

நெல்லைநாதன் ராஜ சந்நிதானத்திலே தலை வணங்கினான். "மன்னர் மன்ன! ஒரு காரியம் சாதித்துவிட்டேன்!" என்றான் வெற்றிச் செருக்குடன். தூணில் நின்ற யாளியைப் பார்த்ததும் ஏதோ மாயாஜாலத்தை எதிர்நோக்கி வந்த மக்கள் கேலிச்சிரிப்பு உகுத்தனர்! "இது தானா நீ சாதித்தது, பித்தனே!" என்றார் மந்திரி. சிற்பி நிமிர்ந்த தலையுடன் யாளியை நெருங்கினான். அதன் வாயில் கைவிட்டு, தனக்குப் பதிலாக, தனது சிருஷ்டியை நகையாடச் செய்தான், 'கக்கட கடகட' என்று.

அவை விளக்கியதும் ஒவ்வொருவராக முயன்றனர், பளபளப்பான அக்கல்லை எடுத்துவிடுவதற்காக. முடிந்தால் தானே! 'அபாரம்!' என்றனர்.

மன்னன் கேட்டான், "இதை எப்படி உள்ளே போட்டாய்?" என்று.

"உள்ளே போடவில்லை. மூலக் கல்லிலேயே சிற்றுளியால் தீட்டிய சிறுகதை அது" என மொழிந்தான் சிற்பி.

"நாவலோ நாவல்! நீ ஒரு பிரம்மா. காந்திமதி......இதோ உன் நாதன்" என்றான் பாண்டியன்.

கலை அன்று கௌரவிக்கப்பட்டது. அதன் அழியாத சாஸனமே கோவில் சிலை.











தந்தி :-"ராதா" போன் நெ. 37.

திருச்சியில்

# "ராதா ஜுவல்லரி ஹவுஸ்"

கியாரண்டியுள்ள சவரன் நகைகள், சுத்தமான வெள்ளிப்பாத்திரங்கள் கண்ணைக்கவரும் தினுசுகளில் எப்பொழுதும் கிடைக்கக்கூடிய

ஒரு பெரிய பெயர் பெற்ற இடம்

புது மாதிரி
வளையல்கள்
கல் பதித்த நெக்லேஸ்
தினுசுகள்



வைர நகைகள்
செயின் தினுசுகள்
எனமல் மோதிரங்கள்
வெள்ளி கொலுசுகள்

கியாரண்டியுடன் கிடைக்கும்

ஆர்டரின் பேரில் எல்லாவிதமான நகைகளும் செய்து கொடுக்கப்படும்.

*Prop*:- G. ராதாகிருஷ்ண செட்டி,

பெரிய கடைவீதி, ஜுவல்லர், திருச்சினாப்பள்ளி.

ஒரிஜினல்

# வெங்கடேசா வைரங்கள்

மிகவும் ஜொலிப்புள்ளது.

(ரிஜிஸ்டர்டு)





(ரிஜிஸ்டர்டு)



## பேபி ஸ்பெஷல் வைரங்கள்

கல் பதித்த நகைகள் கியாரண்டியுடன் கிடைக்கும்.

**Prop**: P. நம்பி நாயுடு, ஷராப், பெரிய பஜார், திருச்சி.

(7-ம் பக்கத் தொடர்ச்சி.)

## கனவும் நனவும்

னுக்கு உத்யோக மாற்றல் ஏற்பட்டது. இயற்கை வளம் நிறைந்த திருச்சிராப்பள்ளியில் வேலை நேரம் போக மற்ற நேரங்களில் காவிரிக் கரை யோரமாகவுள்ள படுகையில், தென்றலின் சுகபாவத்தோடு கலந்து கமழும் பல மலர்களின் வாசனையில் மூழ்கித் தன்னை மறந்திருப்பான். சுதந்திர வீரனைப் போல் தட்டுத் தடங்கலின்றிக் கம்பீரத்தோடு செல்லும் காவிரியைக் கண்கொட்டாமல் பார்ப்பதில் அலாதி ஆனந்தம் அவனுக்கு. அதற்காகவே அவன் தன் வீட்டைச் சிந்தாமணியில் அமர்த்திக் கொண்டான். விமலா தன்னோடு இருந்தது தன் தாய்க்குப் பேருதவியாயிருந்தது. ஓயாமல் யந்திரம் போல் விமலா உழைப்பாள். அந்தப் பெண்ணின் சலனமற்ற ஆழ்ந்த உள்ளத்தில் விதைக்கப் பட்டிருந்தது யாதென்பது அவனுக்குத் தெரியாது. கபடற்ற வாயில்லாச் சிறுமியின் மனப்பூசலை யறிய அவனுக்குச் சக்தியேது? அவள் உள்ளத்தில் ஊன்றிய அன்புவிதை சிறிது சிறிதாக முளை விட்டுக் காதற்கொடியாகப் பரிணமித்தது!

சுந்தரத்தின் உள்ளத்தில் அவனது தமக்கையின் பெண் பட்டு இடம்பெற ஆரம்பித்தாள்! அவளது கட்டழகும், வசீகர சக்தியும் சுந்தரராஜனின் மனதைக் கவர்ந்தன. இயற்கையில் பட்டுவைவிட விமலா அழகில் குறைந்தவளல்ல! எனினும், பட்டு நவநாகரீகத்திற் சேற்ற பகட்டுடையவள். ஆதலின் அவள் அழகு பிரகாசித்தது. நளினத்தையும் ஓய்யாரத்தையும் ஏழை ஊமைப் பெண்ணிடம் எதிர்பார்க்க முடியுமா? ஆனாலும் பெண்ணினுணர்ச்சி யெங்கே போகும்? பொங்கியெழும் கடல் அடங்கிவிடுவதுபோல் அவளது உணர்ச்சிகள் வெளிவர வியலாமல் [illegible]வித்தன. வாயற்ற ஊமையின் [illegible]த்தில் க்ஷணத்தில் தோன்றி மறையும் ரஸபாவங்கள்தான் எத்தனை? விமலா சுந்தரராஜனைக் காணும்போதெல்லாம் தேன் நிறைந்த மலர்கண்ட வண்டு போலாகி விடுவாள்.

அன்றைக்கு அமாவாசை. எங்கும் அந்தகாரத்தின் ஆட்சி நிறைந்திருந்தது. இரவு பத்துமணியிருக்கும், சுந்தரராஜன் பட்டுவின் வீட்டிலிருந்து அப்போதுதான் தன் வீட்டிற்கு வந்தான். கூடத்தில் ஊமைப் பெண் விமலா வெறுந்தரையில் படுத்திருந்தாள் சுந்தரம் நுழைந்ததும் திடுக்கிட்டு எழுந்தாள். வேதனையில் சாயலில் மூழ்கிக் கண்ணீர் விட்டழுது கொண்டிருந்தாளென்று சுந்தரம் யூகித்தான். சுந்தரராஜனின் இதயத்தில் பலவித எண்ணங்கள் தோன்றின. அவள் ஏன் அழ வேண்டும்? அவளுக்கு ஒருவிதக் குறைவும் உண்டாக்கவில்லையே!' என்று நினைத்தான். அவளது கஷ்டத்தை யூகித்தறிவதைத் தவிர வேறென்ன செய்யமுடியும்!

இச்சம்பவம் சுந்தரராஜனின் மனதைவிட்டகலாமல் இராப்பகலாக வாட்டிற்று. நேராய்ப் பட்டுவின் வீட்டிற்குச் சென்றான். அவனது முகத்தில் தேங்கி நிற்கும் துன்ப அலைகளைக் கவனித்த பட்டு ஒருகணம் திகைத்தாள். இன்னதென்று அறியாத நிலையில் அவள் மனம் எண்ணாததெல்லாம் எண்ணிற்று. சுந்தரராஜன் கேட்டான்:—

"விமலாவை நீ சந்தித்து எவ்வளவு நாள் இருக்கும்?"

"நாலைந்து நாளாகிறது! ஏன்?"

"ஒன்றுமில்லை, கேட்டேன்,"

"திடீரென்று இப்படிக் கேட்பதற்கு என்ன காரணம்?"

"இல்லை, அவள்... ஒரு மாதிரியாயிருக்கிறாள்!"

"ஏன்!"

"இறைவனுக்குத்தான் தெரியும்!"

"அதுதான் உங்கள் முகமும் கலவரமடைந்திருக்கிறது. பாவம்! வாயற்றவள்! அவளது குறையைத் தெரிந்துகொண்டு பரிகாரம் செய்ய வேண்டாமா? உடனே நான் அவள் குறையை கண்டு பிடிக்கிறேன்' என்று சொல்லிப் பட்டு உடனே புறப்பட்டாள். வாசல் கதவு திறந்திருந்தது. உள்ளே நுழைந்த பட்டு நேராகச் சுந்தரராஜன அறையை நோக்கிச் சென்றாள்!

விமலா அங்கு என்னவோ செய்துகொண்டிருந்ததை மறைந்திருந்திருந்து, கண்டாள்! அவ்வளவுதான் ஏககாலத்தில் ஆயிரந் தேள் கொட்டியது போன்றிருந்தது பட்டுவுக்கு. கல்லில் செதுக்கிய சிலைபோல அசைவற்று நின்றாள்.

விஷயம் அப்படி யொன்றும் பிரமாதமில்லை. விமலாவின் கையில் சுந்தரராஜனின் போட்டோ இருந்தது. பெண்ணினுள்ளத்தைப் பெண்ணறிந்தாள்! அதற்குமேல் பட்டு அங்கு நிற்கவில்லை. சுந்தரராஜன் பட்டுவின் ரூமில் ஏதோ ஒரு சஞ்சிகையைப் புரட்டிக்கொண்டிருந்தான் விடியற்கால சந்திரன் போன்ற முகத்தோடு பட்டு உள்ளே நுழைந்தாள். அவன் தனது கையில் இருந்த சஞ்சிகையில் 'உடைந்த காதல்' என்ற தலைப்புள்ள பக்கத்தைப் பிரித்து வைத்திருந்தான். அதே சமயம் அவளது பார்வை அதில் விழுந்தது. உடனே பட்டுவின் வாயும் உடைந்த காதல் என முணுமுணுத்தது.

அவன் கேட்டான்: "ஏன் அதற்குள் திரும்பிவிட்டாய்?" அவளால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. "போன காரியம் முடிந்தது" என்றாள் சாவதானமாக.

"என்ன முடிந்தது?"

"ஒன்றுமில்லை, இது தைமாதந்தானே! ஒரு முகூர்த்த நாள் பாருங்கள்"

'என்ன பட்டு, என்னைக் கதிகலங்க அடிக்கிறாயே! எதற்கு முகூர்த்தநாள்?"

"முகூர்த்தநாள் எதற்குப் பார்ப்பார்கள்! இது கூடவா தெரியவில்லை!"

"ஆம், தெரியும், மனித ஹிருதயத்தை மண்ணில் புதைக்க...... ஸ்வாதீனப் பறவையைக் கூண்டில் அடைக்க."

"சரிசரி, இதைக் கேட்கவில்லை. விமலாவிற்கு இம்மாதத்திலேயே கல்யாணம் செய்துவிட வேண்டும்.',

"மாப்பிள்ளையைத் தேடவேண்டாமா?"

"அந்தக் கவலையும் உங்களுக்கு வேண்டாம். தன் புருஷனைத் தானே தேடிக்கொண்டாள். அவர் தன் அண்ணாவுக்கு ரொம்ப சிநேகமாம்!"

விஷயம் புரிந்து விட்டது. ஊமைப் பெண் விமலா தன்னையே கணவனாயடைய எண்ணுகிறாள் என்பதையறிய ஒருபுறம் வியப்பும் ஒருபுறம் ஏமாற்றமும் அடைந்தான். ஆத்மநாதனின் மரண வேண்டுகோள் சுந்தரராஜன் காதில் ஒலித்தது. சாவுப் படுக்கையில் அன்றைக்கு, "எங்கள் வம்ச விருட்சத்தின் ஒரே மொட்டு" எனவும், "வாயற்ற ஊமை—இவளைக் காப்பாற்று" என்றும் ஆத்மன் கூறியவை மீண்டும் கேட்டன. பட்டுவின் தியாக உணர்ச்சி இப்போது சிகர ஸ்தானத்தை அடைந்தது. அவ்வுணர்ச்சியின் மூலம் அவள் அமரத்வம் பெற்றவளானாள். சுந்தரராஜனின் மனதில் மூண்ட பெரும் போராட்டத்தை நன்றாக உணர்ந்தாள். அவள் கேட்டாள்:—

"எந்த யோசனையில் இப்போது ஆழ்ந்திருக்கிறீர்கள்"

"பட்டு, கடமை என்ற ஒன்றைப் பற்றிப் பேசுகிறாய்களே, அதைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?"

"சற்று முன் எந்த விஷயத்தை வற்புறுத்தினேனோ அதை உடனே நிறைவேற்றுங்கள். அதன் பிறகு கடமை இன்னதென்பதை நீங்களே யுணர்வீர்கள்!"

"அப்போது, காதல் என்பது வெறும் ஸ்வப்னம் என்றுதான் அர்த்தமோ?"

"அல்ல! கடமையோடு கலந்து பரிமளித்தால் காதல் ஸ்வப்னத்தில் மட்டுமல்ல! நனவிலும் பிரகாசிக்கும்!"

அதற்குமேல் சுந்தரராஜன் அங்கிருக்கவில்லை. நாள்பல சென்றன. மணப்பந்தலில், கல்யாணக் கோலத்தில் விமலா அமர்ந்திருக்கிறாள்! ஸ்வர்க்கலோகத்திலே, கற்பக விருக்ஷத்தின் நடுவில் போடப்பட்ட ரத்ன ஸிம்ஹாசனத்தில் வீற்றிருப்பதுபோல அவள் மனம் பாவனை செய்துகொண்டது. இன்ப வாரிதியில் மூழ்கி எல்லையற்ற பேரானந்த போகத்தில் திளைக்கும் கந்தர்வஸ்திரீயாக விளங்கினாள்! மாங்கல்ய தாரணம் நடந்தது. பட்டு பின்னாலிருந்து சுந்தரராஜனால் கட்டப்பட்ட மாங்கல்யத்தைச் சரிப்படுத்தினாள். சாமர்த்தியமாக அடக்கிக் கொண்டிருந்த துக்கம் குபீரெனப் பொங்கிவிட்டது அவளுக்கு. கைகள் மாங்கல்யத்தைச் சரிப்படுத்தும்போதே இரண்டு கண்களும் நீரைச் சொரிந்துவிட்டன! குனிந்த நிலையில் இருந்த பட்டுவின் கண்ணீரில் இரண்டு சொட்டுக்கள் விமலாவின் கன்னத்தில் விழுந்து உருண்டோடின.

—★—

(8-ம் பக்கம் தொடர்ச்சி)

## என்னுடன் பேட்டி



விழுந்து கிடந்தது. மூன்ருவது வந்தவர் "ஆகார மித்ரனின்" பிரதிநிதியாம். அடிக்கடி எப்பம் விட்டுக்கொண்டிருந்தார். வரும் பொழுதே சுமார் முக்காலடி வட்டமுள்ள ஒரு அட்டையை என் கையில் கொடுத்து 'இது என்ன தெரியுமா?' என்ருர்.

நான்:— இது வட்டமாய் உள்ளவொரு அட்டை.

ஆ. நிருபர்:— இதன் பெயர் சப்பாத்தி —சென்னையில் இதற்கு இப்பொழுது ரொம்ப மவுசு.

நான்:—ஓஹோ! இது ஒரு ஆயுதம் போலிருக்கிறது?"

ஆ நிருபர்:—ஆயுதமா? ஆகாரம் ஸார் கொஞ்சம் சாப்பிட்டுப்பாருங்கோ இஞ்சி முறப்பா கொண்டுவந்திருக்கிறேன் அதுவுந்தருகிறேன்.

நான்:— இல்லை! இப்போ தான் சாப்பிட்டேன். இதை அப்படியே வைத்திருந்து எங்க ஊருக்குக் கொண்டுபோகிறேன். அங்கே சிலபேர் இருக்கா அவாளுக்கும் கொடுத்து...

ஆ. நிருபர்:— ரொம்ப சந்தோஷம் ஆனு மறந்துடாமே சப்பாத்தியை சாப்பிட்டுவிட்டு அதை விமர்சனம் செய்து எங்க பத்திரிகைக்கு நீங்க ஒரு கட்டுரை எழுதணும்— நான் உத்திரவு வாங்கிக்கிறேன்.

அடுத்தாற் போல் வந்தவர் 'நகர காவலன்' நிருபர்.

ந-நிருபர்:—இந்த நகரத்தைச் சுற்றிப் பார்த்தீர்களா?

நான் இல்லை எனக்கு ஒழிவு ஏற்பட்டால் பார்க்கிறேன்.

ந. நிருபர்:— தர்மராஜ பட்டிணத்திலிருப்பது முனிசிபாலிடியா — கார்ப்பரேஷனு?

நான்:— அப்படி ஒன்றும் அங்கே இருப்பதாகத் தெரியவில்லையே.

ந. நிருபர்:—எத்தனை குப்பை தொட்டிகள் இருக்கின்றன என்ருவது தெரியுமா?

நான்:— அது இன்னும் என் கணக்கில் வரவில்லை. ந. கா-நிருபர்:— ஏதோவொரு நகரத்தில் ஜல சப்ளையும் சாக்கடை திட்டமும் ஒன்ருக வேலை செய்கிறதாமே அது எந்த ஊர் என்று உமக்குத் தெரியுமா?

நான்:— எமலோகத்தில் அப்படி ஒன்றும் இருப்பதாகத் தெரியவிலலை.

ந. கா-நிருபர்:— நமஸ்காரம் போய் வருகிறேன். (அடுத்தாற்போல் வந்தவர் 'சினிமாக்கூளம் நிருபர்.

நான்:— நீங்கள் சமீபத்தில் வெளியான சாவித்திரி படம் பார்த்திருக்கிறீர்களா? அதில் எமன் தர்பாரில் சித்ரகுப்தனுக நடித்தவருக்கும் உமக்கும் ஏதாவது சம்பந்தமுண்டா?

சி. கூ-நிருபர்:— நான் அந்தப் படத்தைப் பார்க்கவில்லை. அதில் சித்ரகுப்தனுக நடித்த ஆசாமியைப்பற்றி என் குறிப்புப் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்தால் தெரியும்.

சி. கூ. நிருபர்:— சாவித்திரியைப்பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?

நான்:— அவள் ஏதாவதொரு ஜென்மத்தில் பூலோகத்தில் ஒரு பத்திரிகை நிருபராக இருந்திருக்க வேண்டும்.

சி. கூ. நிருபர்:— ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்.

நான்:— எமதர்ம ராஜனே அவள் கேட்ட கேள்வியில் சிக்கிக் கொண்டு விட்டாரே.

சி.கூ.நி:— நீங்கள் ஏதாவது தமிழ் படத்தில் நடிப்பதாக உத்தேசம் உண்டா?

நான்:— நீங்கள் ஏதாவதொரு படத்தில் கதாநாயகியாக நடித்தால் அந்தப் படத்தில் நான் நடிக்கத் தயார்.

சி. கூ. நிருபர்:— எமலோகத்தில் சினிமா நக்ஷத்திரங்களை எப்படி நடத்துகிருர்கள்.

நான்:— எமலோகத்திற்கும் நக்ஷத்திரத்திற்கும் சம்பந்தமேயில்லை.

'சினிமா கூளத்தின்' நிருபர் இதோடு என்னை விட்டார்.

அடுத்தாற்போல் வந்தவர் 'வைத்திய சிகாமணி' நிருபர்.

வை. சி. நிருபர்:— உங்கள் நாடியைக் கொஞ்சம் பார்க்கலாமா?

நான்;— வேண்டாம். எல்லோருடைய கை நாடியும் என்னிடம் இருக்கு.

வை. சி. நிருபர்:— எமன் வைத்தியர்களைப்பற்றி என்ன நினைக்கிருர்.

நான்:— அவர்களெல்லாம் பயித்தியக்காரர்கள் என்கிருர்.

வை. சி. நி:— எமனை வைத்தியர்கள் என்ன நினைக்கிருர்கள் தெரியுமா?

நான்:— சொல்லுங்கள் தெரிந்து கொள்கிறேன்.

வை. சி. நிருபர்:— ஏமாந்த சோணகிரி யென்று.

நான்:— சரிதான்.

வை. சி. நிருபர்:— இறந்தவர்களை பிழைக்கவைக்கும் சஞ்சீவி மூலிகை ஒன்று இருக்கிறது தெரியுமா?

நான்:— ஆமாம். ரொம்ப நாளாய் சொல்லிக் கொண்டுதானிருக்கிருர்கள்.

வை. சி. நிருபர்:— நீங்கள் படிக்கும் மாணச் சீட்டு தவறுவதேயில்லையே.

நான்:— இதுவரையில் தவறுவதில்லை. சோதனைக்காக வேண்டுமானுல் போனவுடன் உங்கள் சீட்டை எடுத்துப் படிக்கிறேன். நமஸ்காரம்.

'வைத்திய சிகாமணி' போன பிறகு ஜோதிஷ ரத்னம், நிருபர் வந்து சேர்ந்தார்.

ஜோ. ர. நிருபர்:— உங்கள் ஜாதகம் இருக்கிறதா?

நான்:— என் பாட்டனுர் குறித்து வைக்கவில்லை.

ஜோ. ர. நிருபர்:— ஒருவருடைய மாணகாலத்தை லக்னத்தை மீறி— கிரஹராசிகளை மீறி நீங்கள் குறிக்க முடியுமா?

நான்:— நான் அந்த ஆசாமி பிறந்தவுடனேயே குறித்து வைத்து விடுவேன். அதை குறிக்கும் லக்னம் கிரகம்-ராசி— இவைகளையெல்லாம் பத்தி கவனிப்பதில்லை. மாணகாலத்தில் எந்தகிரஹம்— ராசி எப்படி இருந்தாலும் அது அப்படியே இருக்கவேண்டியதுதான்.

ஜோ.ர. நிருபர்:— மரண யோகம்— எமகண்டம் இவைகளைபற்றி உங்களுக்குத் தெரியுமா?

நான்:— உங்களுக்கு தெரிஞ்சிருந்துமா என்னை பேட்டி காண வந்தக.

ஜோதிஷ ரத்தினம் பதில் ஒன்றும் சொல்லாமல் நமஸ்காரம் செய்துவிட்டுடுப் போனுர். உடனே வேலைக்காரனை கூப்பிட்டு இனிமேல் பேட்டி நாளைக்குத்தான் என்று சொல்லிவிட்டு கதவை மூடு என்றேன். வேலைக்காரன் சொன்னதை சுரு சுருப்பாகச் செய்துவிட்டு என் எதிரில் வந்து நின்ருன்.

"சரி! மெதுவாப்பாரு - எல்லாரும் போயிட்டாங்களான்னு - நம்ம மூட்டையை கட்டலாம். பத்திரிகைக்காரங்க நம்மை முழுங்கிப்பிடுவாங்க—உடம்பை பத்திரமா காப்பாத்திண்டு, வேலையைப் பாக்கணும்னு ;மொதல்லே எமலோகத்தில் போய்தான் திரும்பிப் பாக்கணும். வேணும்னு இவர்களெல்லாம் என்னை அங்கே வந்து பார்த்துக் கட்டும். என்று புறப்பட்டேன்.

# மஹாமகத்தன்று

(ரா விழிநாதன்)

பாத்திரங்கள்:

| | |
|---|---|
| ரகுராமன் | |
| சாவித்ரி | அவனது மனைவி |
| கமலு | 1½ வயதுப்பெண் |
| ராஜு | 3 வயதுப் பிள்ளை |
| லக்ஷ்மி | 6 வயதுப்பெண் |

[குறிப்பு:— இந்த நாடகத்தில் லக்ஷ்மிக்கு ஒன்றுமே வேலை கிடையாது. இருந்தாலும் அவள் கோபித்துக் கொள்ளாமலிருக்கவேண்டுமே என்பதற்காகப் பெயரைமட்டும் சேர்த்திருக்கிறேன். ஆசிரியர்.]

## காட்சி 1

இடம்:—காமாக்ஷி ஜோஸியர் தெரு, ஒரு வீடு.

காலம்:—மகாமகத்திற்கு முதல்நாள் இரவு சுமார் 10 மணிக்கு மேல்.

ரகுராமனும், சாவித்திரியும்.

சாவித்திரி: என்னு!

ரகுராமன்: சொல்லு.

சாவி: நாளைக்கு மகமாச்சே! மாமாங்கக் குளத்துக்குப் போயி ஸ்நானம் பண்ணிப்பிட்டு வருவோமா?

ரகு: ஒரே கூட்டமாயிருக்குமே!

சாவி: கூட்டமாத்தானிருக்கும், இருந்தாலும் புண்யகாலத்திலே ஸ்நானம் பண்ணுமலிருக்கலாமா?

ரகு: எவ்வளவு மணிக்குப் போகணுங்கிறே?

சாவி: விடியற்காலம்பற 4—4½ மணிக்குக் கிளம்புவோமே!

ரகு: சரி. எனக்கும் லீவுதான் போயிட்டு வருவோம். ஆனல் நீ தான் என்னை விடியற்காலம்பற எழுப்பணும்.

சாவி: சரி. எழுப்பறேன். குழந்தைகளையெல்லாம் என்ன செய்யறது?

ரகு: ஆத்து வண்டிதான் போகப்போறது. கூடவே அழைச்சிண்டு போயிட்டுவந்தால் சரியாப்போச்சு!

சாவி: காலம்பற எழுப்பினு எழுந்திருந்துடுவேளோ இல்லேயோ?

ரகு: ஏண்டி! நீ எழுப்பி என்னிக்கி எழுந்திருக்காமெ இருந்தேன். ஒரு நாள் விரலை மடக்கு.

சாவி: ஆமா, ஆமா! நீங்கள் முணுக்குன்னு சத்தங்கேட்டா விழிச்சிண்டிடுவேளா! எனக்குத் தெரியாதாக்கும்.

ரகு: அது கிடக்கட்டும். நாளைக்குப் பாரேன்!

[பேச்சு முடிவுற்றுத் தூங்கப் போய்விடுகின்றனர் இருவரும்.]

## காட்சி 2

[கடியாரம் நாலடிக்கிறது. சாவித்திரி விழித்துக்கொண்டு, முகத்தைக் கழுவிக்கொண்டு கணவனை எழுப்ப வருகிறாள்.

சாவி: இந்தாருங்கோன்னு!

ரகு: .........

சாவி: என்னு! உங்களைத்தானே!

ரகு; .........

சாவி: உங்களைத்தான்னு! எழுந்திருங்கோ. மணி அஞ்சடிக்கப்போறது!

ரகு: .........(விழித்தபாடில்லை.)

சாவி: என்னு, உங்களைத்தானே எழுந்திருக்கப்போறேளா இல்லையான்னு கேட்கிறேன்?

ரகு:...... (இன்னும் பேச்சில்லை.)

சாவி: (தொட்டு எழுப்பியவண்ணம்) நீங்கதான் மாமாங்கக் குளத்துக்கு ஸ்நானம் பண்ண வர்ரேன்னு சொன்ன ஆசாமியோ!

ரகு: (புரண்டு படுத்தவண்ணம்) உம்...

சாவி: நல்ல தூக்கம்! நாசமாப் போற தூக்கம்!!......என்னு!

ரகு: சீச்சீ! என்னடாப்பா நச்சரிப்பு?...

சாவி: நீங்க குளத்துக்கு வரப்போறேளா இல்லையா?

ரகு: ஐயோ, நெச்சரிக்காதயேன்!

சாவி: குளத்துக்கு வர்ரேன்னு சொன்னேளே, வரப்போறேளா, வரல்லையா? சொல்லுங்கோ.

ரகு: ...(பேசவில்லை)

சாவி: அதுக்குள்ளே தூக்கமா? நன்னுயிருக்கு. எழுந்திருங்கோன்னு!

ரகு: முடியாது. முடியாதுன்னு முடியாதுதான்...

சாவி: அப்போ நீங்கள் வரலையா?

ரகு: வரலே.

சாவி: அப்போ, நான்மட்டும் போகட்டுமா?

ரகு: என்ன வேண்டுமானுலும் செய்.

சாவி: அப்போ லக்ஷ்மியைமட்டும் அழைச்சிண்டு போயிட்டு வர்ரேன்!

ரகு: எக்கேடு கெட்டுத் தொலை

சாவி: ராஜுவும் கமலுவும் தூங்கறு. அழாமே பார்த்துக்குங்கோ!

ரகு: ஐயோ, உபத்திரவப்படுத்தாதயேன். இங்கு விட்டுத் தொலையேன்!

சாவி: கதவைச் சாத்தித் தாப்பாப் போட்டுக்குங்கோ. நான் போயிட்டு வர்றேன்.

ரகு: நீ வெறுமனெ சாத்திண்டு போ. நான் சித்தக் கழிச்சுப் போட்டுக்கறேன்.

சாவி: (கிளம்பும்பொழுது) அப்பொ நான் போயிட்டு வரட்டுமா?

ரகு: அதான் அப்பவே சொன்னேனே எதுக்காகத் தொணத் தொணன்னு அதையே சொல்லிண்டிருக்கே. தொலையேன் அரை நாழி மின்னுடி!

சாவி: இதோ தொலைஞ்சுட்டேன்.

ரகு: நாழியாக்காமெ சீக்கிரமா வந்து தொலை.

சாவி: சரி, குழந்தைகள் தூங்கறு. அழுதாக் கவனிச்சக்குங்கோ.

ரகு: சரி, சரி. போயிட்டுவா.

சாவி: போயிட்டு வர்றேன். ஆம், பத்திரம், பத்திரம். என்ன?

ரகு: சரி, சரி, சரி. (சாவித்திரி லக்ஷ்மியுடன் ஸ்நானத்துக்குக் கிளம்பி விடுகிறாள். ரகுராமனும் நல்ல தூக்கத்தில் ஆழ்கிறான்.)

## காட்சி 3

[சாவித்திரி கிளம்பிப்போய் பதினைந்து நிமிஷம் ஆகியிருக்கும். கமலு விழித்துக்கொண்டு அழலானாள். ரகுராமன் நல்ல நித்திரையில் ஆழ்ந்திருந்தான். கமலுவின் அழுகைச் சப்தம் உச்சஸ்தாயியை அடைகிறது. ரகுராமனுடைய தூக்கத்திற்கும் பங்கம் விளைகிறது.]

ரகுராமன்: (படுத்தவண்ணமே, அரைத்தூக்கத்தில்) த்ஸு, த்ஸு, த்ஸு தூங்கு, தூங்கு.

கமலு: (அழுகையை நிறுத்தவில்லை) ஊம்...ஊம்...

ரகு: தூங்கம்மா, தூங்கு, தூங்கு.

கம: அம்மா...ஆஆ...அம்மா...ஆஆ

ரகு: க்ஷாமம். மூதேவி, குழந்தையைக் கத்தவிட்டுவிட்டு மாமாங்க ஸ்நானம் என்ன வேண்டியிருக்கு?...அழாதே கண்ணு. அழாதே, அழாதே.

(அடுத்த பக்கம் பார்க்க.)

(முன் பக்கத் தொடர்ச்சி)

கம: அம்மா ஆ, அம்மா ஆ, ஊம்... (அழுதுகொண்டே தொட்டிலில் எழுந்து உட்கார்ந்துவிடுகிறாள்.)

ரகு: அம்மாவா! அம்மா குளத்துக்குக் குளிக்கப் போயிருக்கா. இதோ வந்தூடுவ, அழாதே கண்ணு (எழுந்து உட்காருகிறாள்.)

கம: (அழுகைச் சப்தம் வலுக்கிறது) அம்மா...ஆவ்...ஆவ், அம்மா...ஆவ்வ்...

ரகு: (எழுந்து தொட்டிலின் அருகில் போய்க்கொண்டே) அட எழவே! இதை எப்படி ஓயவைக்கிறது? சரி, சரி இவளுக்கு என்ன மாமாங்க ஸ்நானம் வேண்டிக்கிடக்கு...அட பாவமே!... (குழந்தையைத் தொட்டிலில் படுக்க வைத்தவண்ணம்) அழாதே கண்ணா, அழாதே.

கம: அம்மா...ஆ, அம்மா...ஆ...ஆ ஊம்...ஊம்...

ரகு: ஆராரோ ஆரிர்ராரோ. அட எழவே. ஆராரோ ஆரிராரோ (பாடுகிறான்.)

கம: ஊம்ம்...ஊம்ம்... (அழுகை ஓய்ந்தபாடில்லை.)

ரகு: அட சனியனே! எதுக்கு அழுது தொலைக்கிறே. வாயை மூடேன். கண்ணான கண்ணேல்லியோ...ஆராரோ ஆரிராரோ (பாடுகிறான்.)

[கமலுவின் அழுகை ஓய்வதாயில்லை. அந்த அழுகைச் சப்தத்தைக் கேட்டு ராஜு வேறு விழித்துக்கொண்டுவிடுகிறான்.]

ராஜு: (விழித்துக்கொண்டு) அம்மா, அம்மா!

ரகு: ஏண்டா?

கம: ஊம். ஆவ் அம்மா ஆவ்...

ராஜு: அம்மா, அம்மா!

ரகு: எலே, இதோ நானிருக்கேண்டா, பயப்படாமெ தூங்கு.

ராஜு: அம்மா, அப்பா...

ரகு: இதோ வந்தூடுவ. நீ பேசாமல் தூங்கு.

ராஜு: அம்மா எங்கேயப்பானுக்கே! (முனகுகிறான்.)

ரகு: குளிக்கப்போயிருக்கா. இதோ வந்தூடுவ. பேசாம தூங்கு.

ராஜு: (எழுந்திருந்து கொட்டில் புறமாகப் போய்க்கொண்டே) அப்பா, அம்மாவைப் பார்த்தூட்டு வர்றேன், அப்பா.

ரகு: அம்மா கொட்டில்லே இல்லேடா, குளத்துக்குப் போயிருக்கா. இதோ வந்தூடுவ. நீ இங்கே வந்து படுத்துக்கோ.

ராஜு: (அழ ஆரம்பிக்கிறான்) என்னை என் அப்பா விட்டுட்டுப் போயிட்டா, அம்மா?

ரகு: நீ தூங்கிப்போயிட்டே, அதனாலேதான்.

ராஜு: என்னை ஏம்ப்பா எப்பலை. ஊம்...ஊம்...

ரகு: எலே, என்னடா அழுகை? உங்க அம்மா ஓடிப்போயிடமாட்டா, இங்கே வந்து படு.

ராஜு: மாட்டேம்ப்பா. ஊம்... ஊம்...

ரகு: நீயும் கமலுவாட்டமா அசடா? அழாதேடா, இதோ பார்டா, அழுதுண்டேயிருக்கா. நீ சமத்தோல்லியோ!

ராஜு: நான் அழுவேன் அப்பா.

ரகு: என்ன? அழுதே, உதைதான்.

ராஜு: நானும் குளத்துக்குப் போறேம்ப்பா. ஊம்...ஊம்...

ரகு: இந்த இருட்டிலே எப்படிடா போறது?

ராஜு: அம்மாகிட்டே போகணும்ப்பா.

ரகு: என்னடா, அறுபது நாழியும் அம்மா.

ராஜு: (முனகியவாறே) எனக்கு அம்மாத்தான் வேணும்.

ரகு: நான் உனக்கு ஒரு மனுஷ்யன் மாதிரித் தோணலையோ!

ராஜு: அம்மாக்கிட்டே கொண்டு விடப்பா (அழ ஆரம்பிக்கிறான்.)

கம: அம்மா...ஆ...அம்மா...ஆ... (இரண்டு குழந்தைகளின் அழுகையும் ஒன்றுசேர்ந்துவிடுகிறது.)

ரகு: (கோபந்தாளமாட்டாமல்) இந்தச் சனியன்களை குழியை வெட்டித்தான் புதைக்கணும். என்ன பாடு படுத்துகிறதுகள்! ஒரு க்ஷணம் தூங்கவிட்டால் தானே! சனியன்கள், க்ஷாமம்! ராஜு, அழுதே பிச்சுப் பிரியைக் கட்டிப்பிடுவேன். கமலு, அழப்படாது. அழுதே, உனக்கும் உதைதான் புரிஞ்சுதா?

[இரண்டு குழந்தைகளும் அழுவதை நிறுத்தியபாடில்லை. ரகுராமன் பொறுமையிழந்துவிட்டான். ஒவ்வொன்றின் முதுகிலும் நாலைந்து அடி விழுகிறது. 'வீல்வீல்' என்று ஒரேயடியாய்ச் சத்தம் போடுகின்றன.]

காட்சி 4

[சுமார் 8 மணியிருக்கும். ஸ்நானத்தை முடித்துக்கொண்டு, சாவித்திரி லக்ஷ்மியுடன் வண்டியில் வந்து இறங்குகிறாள்.]

ரஜு: (அழ ஆரம்பித்துக்கொண்டு) அம்மா, என்னை ஏனம்மா விட்டுட்டுப் போனே?

கம: அம்மா...அம்மா, அப்பா...

சாவி: அப்பா, அடிச்சாளா, அசட்டு அப்பா!...என்ன, குழந்தைகளை ஏன் இப்படி அடிச்சேள்?

ரகு: (கோபத்தில்) இது குழந்தைகளா? கோட்டான்கள்! என்ன பாடு படுத்தறதுகள்! அப்பா அப்பா.

சாவி: எதுக்குக் குழந்தைகளைக் காலங்கார்த்தாலே இப்படி வைறேள்? சித்தெநாழி குழந்தைகளை அழாமெ வைச்சுக்க முடியலைன்னா, இப்படி வைவானேன்?

[குழந்தைகளுக்கு வாழைப்பழம், திராக்ஷைப்பழம் முதலியவைகளைக் கொடுத்து சமாதானப்படுத்துகிறாள்.]

சாவி: இப்போ அழறதுதானே! குழந்தைகளை வச்சிக்கிற விதம் உங்களுக்குத் தெரிந்தால்தானே!

ரகு: அந்தப் பீடைகளை என்ன செய்தால் தேவலை. எவ்வளவு நான் சமாதானப்படுத்தினேன். அழுகையை நிறுத்தமாட்டேன்னூடுத்துகள். நீ வந்ததும், அழுகை போனஇடமே தெரியலை. பொறக்கறதுக்குமுன்னாடி என்ன பாடு படுத்தறதுகள்! அம்மான்னா ஒண்ணு. அப்பான்னா ஒண்ணு.

சாவி: குழந்தைகள்னா அப்படித்தானிருக்கும்.

ரகு: அப்படித்தான் இருக்குமோ! எக்கேடு கெட்டுத் தொலையட்டும், நீ போய் முன்னாலே காபி போடு.

(திரை விழுகிறது.)

# உழைப்பும் பலனும் ★

‘அசோகன்’

★

‘தென்னமரச் சாலை’ என வழங்கும் அந்த ரோட்டைக் கடந்து ஆற்றங்கரைப் பாதையை அடைவதற்குள் வியர்த்து, விறுவிறுத்துப் போய்விட்டார் ரகுநாதம்.

‘உஸ், அப்பாடா,’ என்று களைப்பைப் பெருமூச்சாக வெளிப்படுத்திய அவர், “சாலையாம் சாலை! பேருக்கு ஒன்றிரண்டு மொட்டை மரங்கள் இன்னும் விழாமல் நிற்கும் அந்த ரோடை தென்னைமரச் சாலை என்பது, என்னை இன்னும் பண்ணை பண்ணை என அழைப்பதைப் போலத்தான். பழமையைப் பற்றிக் கொண்டிருப்பதில் உடும்புகள் தான் நம்மவர்கள்’ என்றெண்ணியபடியே கரையோரமிருந்த தோப்பை நோக்கி நடந்தார்.

மாமரத்தின் குளிர்ந்த நிழலிலே அமர்ந்து, மேல் துண்டை எடுத்து முகத்தையும், உடம்பையும் துடைத்தவாறே எதிரே பார்த்தார். நண்பகல்க் கதிரவனின் கடுங் கிரணங்களை ஏற்று, மணற்காடு கானல் ஒளி கக்கிக் கொண்டிருந்தது. [illegible]டை வெப்பத்தின் ஆதிபத்தியத்திற்கு ஒடுங்கி அடிமையாகிய ஆறு, தன் தெம்பிழந்து குறுகலாக மத்தியில் ஓடிக்கொண்டிருந்தது, ஒரு காலத்தில் சுமாரான செல்வந்தராயிருந்து இப்போது வறிஞராகி விட்ட ரகுநாதத்தைப்போல. எதிர்கரையிலே, செங்கற் சூள்ளையிலிருந்து செங்கல்களை எடுத்து ‘மொட்டை’ வண்டியில் ஏற்றிக்கொண்டிருந்தார்கள் இரண்டு மூன்று தொழிலாளர்கள்.

இளமைப் பருவத்தில் ஆறு பொங்கி இரு கரையும் வழிந்து போகும்போது, வெறும் விளையாட்டிற்காகப் போட்டி போட்டு அக்கரைக்கு நீந்திப்போன சம்பவங்களை நினைவுக்குக் கொண்டுவந்தார். இப்பொழுது அவரால் அப்படி முடியுமா? அப்படி அவருக்கென்ன தொண்ணூறும் பத்துமா வயதாகி விட்டது? இல்லைதான்; என்றாலும் வறுமை அவர் வாழ்விலே குறுக்கிட்டு வாட்டி எடுத்துவிட்டது. அதற்குத்தான் எவ்வளவு சக்தி!

தாகம் எடுத்தது அவருக்கு. தண்ணீர் குடிக்க எங்கே போவது? ஆற்று நீரோ கொதிக்கும். அதையாவது குடித்து வைப்போம் என்றாலும் அக்னியாகச் சுடும் அம்மணற் பரப்பைக் கடந்து போக முடியுமா? உணர்ச்சிக்குத் தடையுத்தரவு போட்டுத் தாகத்தை அடக்கினார். ‘இன்னும் ஐந்து மைல் போயாக வேண்டுமே? எப்படிப் போய்ச்சேரப்போறேமோ?” என்ற கவலை எழுந்தது.

“என்னசாமி? வெயிலோடே எங்கே கிளம்பிட்டீக?”

பின்னால் எழுந்த குரல் சிந்தனையிலிருந்த ரகுநாதத்தைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. எதிரே துரைசாமி நாடார் நின்றுகொண்டிருந்தார்.

“டவுன் வரை போகணும்”

“காலையிலேயே போறது என்ன? அல்லது ரயிலிலேதான் போகப்படாதா?

‘விட்ட பாம்பும் செத்துப் போகும் போலிருக்கே வெயில்,’ என்றார் நாடார்.

“வெயிலைப் பார்த்தா வேலை நடக்குமா? இப்பதான் தபாலிலே காகிதம் வந்தது. பிரசிடெண்ட் காலமேதான் ஊரிலிருந்து வந்திருக்காராம். திரும்ப சாயங்காலம் போறாராம். ஒரு வேலை விஷயமாகப் பார்க்கணும். மூணேமுக்கால் மணி வண்டிக்குப் போறதுன்னு நாழியாயிடும். ஸ்டேஷனுக்கும் இங்கே ரண்டு மைல் நடக்கணும். அங்கேபோயும் ஒண்ணு ஒண்ணரை மைல் போகணும். அதைவிட இப்பவே புறப்பட்டு இப்படி எட்டிப் புடிச்சாப்பிலே போயிறலாமேன்னு கிளம்பினேன்.. அதோ வெயிலிலே வண்டியில் செங்கல் ஏத்தறவாளும் மனுஷர்கள்தானே......”

“அவங்களும் சரி; பண்ணை நீங்களும் சரியா? நீங்க மட்டும் யார் வக்கேடு கெட்டா என்னண்ணு இருந்திருந்தா, இப்ப ராஜா மாதிரி இருக்கலாமே......ஒரு பய கிட்டப் போய் எதுக்காச்சும் தொண்ணூந்து நிற்கணுமா......”

தானாகத் தன் விஷயத்தை நாடாரிடம் வெளியிட்டார் என்றாலும் அவரது உபதேசத்தை விரும்பவில்லை ரகுநாதம். பிறர் தம் விஷயத்தில் தலையிடுவதென்பது எப்பொழுதுமே பிடிக்காது அவருக்கு. நாடாரின் பேச்சைக் கேட்கவும் விருப்பமில்லை. தடுத்துச் சொல்லவும் நா எழவில்லை.

“நான் கிளம்பறேன். நாழியாச்சு,” என்று புறப்பட்டார்.

“இரண்டு இளனி வெட்டித் தாரேன். சாப்பிட்டுவிட்டுப் போங்களேன்.”

நாடாரின் பரிவு பரிகாசமாகப் பட்டது ரகுநாதத்திற்கு. தன் வறுமையை எண்ணி நாடார் தம்மைக் கேலி செய்கிறாரோ என்று எண்ணினார். “ஒண்ணும் நான் கேட்கலையே,” என்று ஆத்திரமாகச் சொல்லிவிட்டு, துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு நடந்தார்.

இளநீர் வேண்டாம் என்றது பரவாயில்லை, கோபம் ஏன் என்று யோசித்த நாடாருக்குப் பச்சாதாபம்தான் ஏற்பட்டது. ‘எப்படியிருந்த குடும்பம். எப்படி ஆயிட்

(அடுத்த பக்கம் பார்க்க)

—(முன் பக்கத் தொடர்ச்சி)—

டது! எல்லாம் காலம்' என முணங்கியவராய் தோப்பு மூலையிலிருந்த குடிசையை நோக்கிப் போனார். அங்கே கிடந்த நார்க் கட்டிலிலமர்ந்து ரகுநாதத்தின் மூதாதையர் இருந்த செல்வ நிலை, படிப்படியாகத் தாழ்ந்து ரகுநாதத்தின் தகப்பனார் காலத்தில் சுமார் நிலை அடைந்தது, தகப்பனார் இறந்த பிறகு கலாசாலைப் படிப்பை விட்டுத் தேசிய இயக்கத்திலீடுபட்டு ரகுநாதம் சிறை சென்றது, அந்தச் சமயம் பார்த்து அவர் தாயாரை ஏமாற்றிச் சுற்றத்தார்கள் சொத்து, சுகங்களை அபகரித்துக் கொண்டதையெல்லாம்பற்றி யோசித்து மனித வாழ்வை 'எடைபோடுவதிலீடுபட்டார்.'

ஊடே ரகுநாதத்தின் பால்ய லீலை ஒன்றும் அவருக்கு ஞாபகம் வந்தது. அவர்கள் குடும்பத்துத் தோப்பு ஒன்றையும் நாடார்தான் குத்தகைக்கு எடுத்திருந்தார். ஒரு சமயம் கலாசாலை விடுமுறையின் போது, ரகுநாதம் சில சிநேகிதர்களோடு வந்து 'பதனி' கேட்டார். கேட்ட சமயம் பதநீர் முழுவதும் காலியாகிவிட்டது. 'இல்லை, நாளை வாருங்கள்,' என்றார். கோபமாகப் போன ரகுநாதம் தன் நண்பர்களின் உதவியைக் கொண்டு, இரவோடு இரவாகப் பனைமரங்களின் பாளைகளையெல்லாம் சீவி எறிந்துவிட்டார்.

ரகுநாதம் நடந்துகொண்டிருந்தார். வெய்யிலைப் பார்த்தால் காரியம் ஆகவேண்டாமா? போகப் போக நாடாரிடம் தான் அப்படி நடந்துகொண்டிருக்கக் கூடாது என்று அவர் மனமே போதித்தது. பிறகு தம் வாழ்க்கையைப் பற்றி யோசித்துக் கொண்டே போனார்.

ஒரு மட்டும் பாதிதூரம் கழிந்துவிட்டது.

"என்ன பண்ணையார்வாள்? எங்கே வெயிலோடே?" என்ற அழைப்பு வந்தது எதிரே இருந்து.

"ஏன் நான் உயிர்வாழ்வது ஒருவருக்கும் பிடிக்கவில்லையா? எதற்கு இப்படிப் பிராணனை வாங்குகிறீர்கள்?" என்று முணுமுணுத்த ரகுநாதம் தம்மை அழைத்தது யாரென்றறிய நிமிர்ந்தார். பக்கத்துப் பெரிய கிராமத்திலிருந்து தம் பலசரக்குச் சாமான் வாங்கி, திரும்பிக்கொண்டிருந்த சுப்பையா பிள்ளை.

"என்ன சுப்பையாபிள்ளை அண்ணாச்சி நீங்களுமா கேலி? டவுன் வரை போகணும். பிரஸிடெண்டைப் பார்க்கணும்வேலை விஷயம்."

"உமக்கு வேலை கொடுப்பதற்கென்னவே? தேசத்திற்காக எவ்வளவு பாடுபட்டிருக்கிறீர். எத்தனை தடவை ஜெயிலுக்குப் போயிருக்கிறீர்! மண்டை பிளந்து ரத்தம் கக்கும்படியாக அடித்தல்லா இழுத்துக்கொண்டு போனார்கள் கா, காவென்று, உமக்கு வேலை கொடுக்க மாட்டேன் என்று நேற்றுக் கட்சியிலே சேர்ந்து பிரசிடெண்டான இவன் சொன்னான்னா, கட்சி எதற்கு இருக்கு என்று கேட்டேன்?" என்று இரைந்தார் சுப்பையா பிள்ளை. அவரே அப்படித்தான்.

"நீங்களாவது இவ்வளவு சொன்னீர்களே அண்ணாச்சி. மிகவும் சந்தோஷம். நான் தேசியக் கட்சியைச் சேர்ந்தவன் என்று எத்தனையோபேர் எனக்கு வேலைதர மறுத்துவிட்டார்கள், நான் போய் கடைசி அழுகையை அழுதுவிட்டு வந்து விடுகிறேன்."

"சரி போய்வாருங்க. பயம் வேண்டாம்."

அவருக்கு உற்சாகமாகக் கூட இருந்தது.

பிரசிடெண்ட் வீட்டை அடைந்து சேவகனிடம் சொல்லி அனுப்பினார். அவன் திரும்பி வந்து "எல்லாம் நீனைவிருக்கு- சொல்லி அனுப்புகிறேன்,' என்று அவர் கூறியதாகச்சொன்னான்.

# வீணை!

ரகுநாதன்



ஜானகியின் மனம் குதுகலத்தால் துள்ளிக் கொண்டிருந்தது. தனது சங்கீத வித்வத்தை முதன் முதல் சதஸிலே, ரசிகர் பலர் முன்னிலையில் வெளிப்படுத்தப் போகிறோம் என்பதால் ஏற்பட்ட உத்ஸாகவெறி அவள் மனத்தைக் கிறக்கியது.

ஜானகி வயது வந்த யுவதி; ஆனால், அழகியல்ல. நிறம் மட்டும் கொஞ்சம் கருப்பு. மேலும், சிறு பிள்ளையில் என்றோ மகமாயி விளையாடிய அழிக்க முடியாத அடிச்சுவடுகள் அவள் முகத்தில் ஆழப் பதிந்திருந்தன. அவள் உள்ளமோ வெள்ளை; வடுவற்றது.

வீணை நரம்பை அவள் கை விரல்களால் தடவும் போது, மாதுர்யமான நாதம் அதிலிருந்து அதிரும். அவள் தான் வாசிக்கிறாளா, இல்லை, ஏதோ ஒரு தேவநாதம், அவள் விரல் நுனிகளை எய்தி, உயிர் பெற்றுத் துடிக்கும் தந்திகளில் நடனமாடுகிறதா என்று சந்தேகப்படும் வண்ணம் வாசிப்பாள். அவளது வாசிப்பில் தனது சொந்தக் கற்பனைகளும், அபூர்வமான சங்கதிகளும் உதிரும். வஸந்தத்தின் தென்றலைப் போல, மிதந்துவரும் அந்த வீணையின் நாதத்தோடு, அவளுடைய கானமும் குழைந்துவரும்போது, ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்கியப்படுவது போலவே சோபிக்கும்.

ஜானகி பாட ஆரம்பித்தாள். அபூர்வ ராகினி உருப்பெற்று சதஸில் இறங்கியது போல, அவள் ஒலி இழைந்து கறங்கியது. ரசிகர்களின் மனங்கள் நாதமண்டலத்தில் மிதக்க வாரம்பித்தன. பாஞ்சசன்யத்தின் ஓங்காரத்தைப்போல, அவள் பாட்டு எவ்வியது.

"ஓம் ஜகத் ஜனனீ கல்யாணி ஓங்கார ரூபிணி..." என்று அவள் எட்டிப் பிடித்துப் பாடியபோது, நாதப் பிரம்மத்தோடு முயங்கி நிற்கும் ஜகன்மாதாவின் திருமுடிச் சிகரத்தையே ஆரத் தழுவித் துடிப்பதுபோல இருந்தது.

பாட்டு முடிந்ததும் ஒரே 'அப்ளாஸ்!' ஜானகியின் மனம் துள்ளியது.

அடுத்த பாட்டுக்கு சுருதிகூட்டினாள். அவள் மனமோ அகண்ட கனவுக் கடலில் உல்லாசமாக நீந்திற்று: "ஜானகி பெரிய பாடகியாகிறாள். அவள் சங்கீதத்துக்கு உலகில் கிராக்கி ஏற்படுகிறது. புகழ் ஏறுகிறது! கலையின் நுணுக்கமெல்லாம் அவளுக்குப் பிடிபட்டுப் போகின்றன. பேர் — புகழ்—கீர்த்தி! இன்னும் எட்ட முடியாத லக்ஷியத்தின் மங்கிய பார்வை போல, எத்தனையோ கனவுத் திரைகள்!"

அவளது கனவைக் குலைத்தது, அந்தக் குரல்:

"என்னதான் நல்லாப் பாடினாலும், சரக்கு நயமில்லையே—மூஞ்சியைப்பாரு. மூணு நாளைக்கி..." என்றான் முன்னேயிருந்த 'சவடால்' போர்வழி.

அவ்வளவுதான். அவளது கனவு மாளிகை பூகம்பத்தால் சிதறுவது போலச் சிதறியது. 'வானையளாவி', மேக மண்டலத்தையே மறைக்கத் துணிந்த கனவுச் சிற்பம் பொடிப் பொடியானது. அவள் மனம் சுழன்றது:

"சே. இதுதான் உலகமா? கலையை ரசிப்பதாக எண்ணும் மாயை மயக்கமா? உலகத்து மனிதர்களின் கலையுணர்ச்சி இவ்வளவு மட்டமாகவா போகவேண்டும்? ஆளை வைத்துத்தான் கலைக்கு மதிப்பா? நான் கருப்பாயிருந்தால், என் கலைக்கும் அதே பழியா? என்னுடைய அழகின் நிழலிலா கலை வாழ்கிறது? இல்லை. கலை யென்பது புற வழகில் முயங்கி வாழ்வதல்ல. ஆனால், உள்ளத்தின் ஒளியோடு ஹிருதயத்தோடு நிற்கும் நிர்மலமான தன்மையோடு, அமரத்வம் எய்தத் தகுந்த பிரகிருதியின் லீலையோடு சம்பந்தப்பட்டது. ஆனால், இந்தப் பாழும் ரசனை கெட்ட உலகம் இதை உணருமா? இந்த ரசனை கெட்ட உலகுக்கு பாட்டு ஒரு கேடா? சீ!"

அவள் உணர்ச்சிகள் கிறுகிறுத்தன.

தன்னை மறந்த வெறுப்பும் ஆத்திரமும் கலந்த வெறி வேகத்தில் அவள் விரல்கள் வீணையின் தந்திகளை முறுக்கின. துடி துடித்து நாத அலைகளை வீசும் தந்திகள் விறைத்தன;

"டங்!" வீணைத் தந்தி ஒன்று அறுந்து அடிபட்ட சர்ப்பம்போல சுருண்டு துவண்டது!

அதே நேரத்தில் ஜானகியின் ஹிருதய வீணையில் அற்புதமான கனவுகளை சிருஷ்டித்துக்கொண்டிருந்த தந்திகளும் பட்டென்று அறுந்தன.

அவள் பிரக்ஞை அவளைக் கைவிட்டது!







Printed at The Trichinopoly United Printers Ltd., Trichinopoly and Published by T. Sivagnanam (Editor)